# குஹாவதார - ரகசியம்



வ.ச.வை.குருஸ்வாமி சாஸ்திரிகள்

உ

## பதிப்புரை

குஹாவதார ரகசியம் என்னும் பெயருடைய இந்நூல் தன்னைப் பரவும் மெய்யன்பர்களுக்குத் தண்ணளி புரிந்து பேரின்பம் நல்க வல்ல ஆறுமுக பெருமானின் திருஅவதாரம் முதலாய், அப்பெருமானின் பெருமைகளைக் குறைவற விளக்கி, அருள்நெறியில் அடியார்க்கு அன்பு நெறிகாட்டும் பெருங்கருணைத் திறமனைத்தும் தெளிவுறக்கூறி அவன் திருவடி பரவச்செய்யும் சிறந்த நோக்கத்துடன் எழுதப்பெற்ற ஒன்றாகும்.

இதனை வடமொழியாகிய பழமையும், வளமும் சான்ற சமஸ்கிருதமொழி இலக்கியங்களுள், ஆங்காங்கு காணும் திருமுருகன் செய்திகள் அனைத்தையும் தொகுத்து அவற்றை தமிழாக்கம் செய்தும், வேண்டிய விளக்கங்களைத் தெளிவாக கொடுத்தும், யாவரும் உணர வல்ல தெள்ளிய தமிழ் நடையில் மதிப்புக்கும், மரியாதைக்குரியம் உரிய நூல் ஆசிரியர் வ.ச.வை.குருஸ்வாமி சாஸ்திரிகள் ஆக்கித் தந்துள்ளார்.

சைவப்பிரகாச சபையினரால் (திருவனந்தபுரம்) 1961ல் வெளியிடப்பட்ட இந்நூல் மறுபதிப்பை "குரு பதிப்பகத்தின்" முதல் வெளியீடாக பிரசுரிப்பதில் மிகவும் மகிழ்ச்சி அடைகிறோம்.

இந்தநூலை நல்ல முறையில் பிரசுரிக்க அனைத்து அச்சு வேலைகளுக்கும் உதவிய கார்த்திகா கிரியேஷன்ஸ் உரிமையாளர் ஸ்ரீ.சுரேஷ்பாபு அவர்களுக்கு எங்களது உள்ளங்கனிந்த நன்றியை தெரிவித்துக் கொள்கிறோம்.

இந்நூல் சிரஞ்சீவி. சங்கரராமகுருஸ்வாமி. சௌபாக்யவதி. விஜயலட்சுமி இவர்கள் திருமணத்தன்று (15-05-2005, ஞாயிற்றுக்கிழமை) வெளியிடப்பட்டது.



பிரும்மஶ்ரீ வரகூர் வ. ச. வை. குருஸ்வாமி சாஸ்திரிகள்

## நூல் - ஆசிரியரைப் பற்றி

தஞ்சைக்கு அருகே பூபதிராஜபுரம் என்ற சிற்றூர் இருக்கிறது. பின்னாளில் பூபதிராஜபுரம்-வராகபுரம் என்று மாறி, பிறகு வரகூர் என்று ஆயிற்று. இவ்வூரில்தான் நூல் ஆசிரியர் பிரும்ம-ஸ்ரீ-வரகூர் சங்கர வைத்யநாத குருஸ்வாமி சாஸ்திரிகள் 1911-ல் டிசம்பர் மாதம் 12-ஆம் தேதி பிறந்தார்.

ஆந்திர மாநிலத்தைச் சேர்ந்த மங்களகிரியில் பதினேழாம் நூற்றாண்டில் பிறந்த தென்னகத்திற்கு குறிப்பாக தஞ்சை மாவட்டத்திற்கு வந்து இறைவனை கீர்த்தனங்களால் வழிபட்டவர் நாராயண தீர்த்த சுவாமிகள் வயிற்றுவலியால் அவதிப்பட்டு வந்த அவரை இறைவன் வராஹ உருவில் பூபதிராஜபுரம் என்ற வரகூருக்கு அழைத்து வந்து அந்நோயை குணமாக்கினார் என்பது வரலாறு. அந்த 'வரகூர்' என்ற சிற்றூரில் குடி கொண்டுள்ள ஸ்ரீனிவாசப்பெருமாள் சன்னிதிலேயே கண்ணன் பிறப்பு முதல் ருக்மணி கல்யாணம் ஈறாகப் பாடிய வடமொழிப்பாடல் 'கிருஷ்ண லீலா தரங்கிணி' என்ற பாகவதப் பஜனை சம்பிரதாயப் பாடலாகும். ஆனை பாகவதர், கோபால பாகவதர், அய்யாசாமி பாகவதர், நாராயண பாகவதர், முத்துசாமி பாகவதர், அச்சுத கிருஷ்ண சாஸ்திரி, இராமகிருஷ்ண சாஸ்திரி, நாராயண சாஸ்திரி, பாஷ்ய பாவக்ஞ ஸ்ரீ கல்யாண சுந்தர சாஸ்திரிகள், வேங்கட்ராம சாஸ்திரி, காசியப்பா, அம்பி சாஸ்திரி, நாராயண கனபாடிகள், மாப்பிள்ளை வாத்தியார் முதலியோரும் வரகூரில் பிறந்து வாழ்ந்த அறிஞர் பெருமக்கள் ஆவர்.

வாழையடி வாழையாக வரும் வரகூர் பண்டிதர்களில் வரகூர் சங்கரசிவன் கூட்டம் ஆத்ம வித்யா பூஷணம் சங்கர வைத்யநாத குருஸ்வாமி சாஸ்திரிகள் (நூல் ஆசிரியர்), சாஸ்த்திர வேதாந்த உபநிடத நூல்களை கற்றுத்தெளிந்து பாடம் சொல்லி வந்தவர். இவர் வரகூர் ஸ்ரீ வேங்கடேஸப் பெருமாளிடம் தன் தந்தையைப் போல மிகுந்த பக்தியுடைவர். இளம்வயதிலேயே இவருக்கு சமஸ்கிருத மொழியில் மிக்க புலமையுண்டு. கும்பகோணம் மஹாராஜா பாடசாலையில் ஆரம்பக்கல்வி பயின்றான். சென்னைப்பல்கலைகழகத்திலிருந்து சாஹித்ய சிரோன்மணி, வேதாந்த சிரோன்மணி முதலிய பட்டங்களையும் சென்னை சமஸ்கிருத கல்லூரியில் அறிஞர் பேரவையில் வேதாந்த விசாரத பட்டத்தையும் பெற்றார். சென்னை அரசில் ஆய்வு வித்தகராகப்பணிபுரிந்து 'சாரீரக வ்யாக்யா ப்ரஸ்தானம்' என்ற ஆராய்ச்சி நூலை வெளிக்கொணர்ந்தார். (1938-1940) இந்நூல் அறிஞர்களால் மகவும் பாரட்டப்பெற்றது.

1944 ஆம் ஆண்டுமுதல் 1968 வரை திருவாங்கூர் திருவனந்தபுரம் மகாராஜா சமஸ்கிருத கல்லூரியில் (அரசு சமஸ்கிருத கல்லூரி) விரிவுரையாளராக, பேராசிரியராக, வேதாந்தத்துறைத் தலைவராக, கல்லூரி முதல்வராகவும் பணிபுரிந்தார். பல்கலைக்கழக மான்யக்குழுவினரின் ஆய்வு வித்தகராக கேரளப் பல்கலைக்கழகத்தில் 1975-1978 வரை பணியாற்றினார். தமிழ், வடமொழி மற்றும் பிற இந்திய மொழிகள் ஆராய்ச்சி நிறுவனம் சென்னையில் கௌரவப்பேராசிரியராக பணிபுரிந்தார். (1982)

சென்னை, மும்பை, டில்லி மற்றும் இந்தியாவின் பிற இடங்களில் ராமாயணம், பாகவதம், ஸ்கந்தம், தேவிபாதகம் பற்றி ஆன்மிக சொற்பொழிவுகள் ஆற்றியுள்ளார்.

கொச்சி மஹாராஜா, திருவாங்கூர் சித்திரைத்திருநாள் மஹாராஜா, காஞ்சிப்பெரியவர், சிருங்கேரி சங்கராச்சாரியார் இவர்களிடம் பட்டங்களும் தங்க மெடல்களும் பரிசு பெற்றுள்ளார் திருஅனந்தபுரம் சமஸ்கிருத கல்லூரி பொன் விழாவில் டாக்டர்.இராதாகிருஷ்ணனிடமிருந்து தங்கமெடல் பரிசு பெற்றார். இவரது உபநிடத பாஷ்யம், கீதா பாஷ்யம் பிரும்மசூத்ர பாஷ்யம் இவைகளில் தீவிரப்புலமையைப்பாராட்டி - பிரஸ்தான த்ரய வித்வான் என்கிற விருத கும்பகோணம் மற்றும் திருச்சி அத்வைத சபைகள் வழங்கி கௌரவித்தன.

**1963** ல் திருப்புணித்துறை சமஸ்கிருத கல்லூரி பொன்விழாவில் கொச்சி மஹாராஜா "வேதாந்த நிபுண" என்ற விருதை வழங்கினார்.

**1973** மார்ச் 24-ல் வடமொழிப்புலமையையும் சாஸ்திரங்களில் உள்ள ஆழ்ந்த அறிவையும் ; கௌரவித்து ராஷ்டரபதி விருது (Certificate of Honour) அப்பொழுது குடியரசுத்தலைவராக இருந்த வி.வி.கிரி அவர்களால் வழங்கப்பட்டது.

**1978** ல் ஆத்ம வித்யாபூஷணம் என்ற அரிய விருது காஞ்சிப்பெரியவரால் வழங்கப்பட்டது.

**1980** முதல் சென்னையில் குடியேறி வேதாந்தம் மற்றும் ஆன்மீக விஷயங்களில் வகுப்புகளும், சொற்பொழிவுகளும் மயிலை ராமகிருஷ்ணமடம், சிருங்கேரி ஸ்ரீ ஜகத்குரு கல்வி மற்றும் அறக்கட்டளை ராஜா அண்ணாமலைபுரம் சார்பில் தொடர்ந்து நடத்தி வந்தார்கள்.

**1984** ல் திருச்சி சமஸ்கிருத சாஹித்து பரிஷத் வித்வத் சதஸ்ஸில் வேதாந்ததூரிண : என்ற விருது அளித்து கௌரவித்தது.

தமிழ் சமஸ்கிருதம், ஆங்கிலம், தெலுங்கு, மலையாளம் மொழிகளில் பாண்டித்யம் உள்ள இவர். பல நூல்களும் விளக்கவுரைகளும் எழுதி வெளியிட்டுள்ளார்கள்.
09-12-2000 அன்று காலமான இவருக்கு ஈடாக புலமை பெற்றவர்கள் காணக்கிடைப்பது மிகவும் அரிது என்பதில் ஐயமில்லை.

## ஆசிரியர் இயற்றிய நூல்கள் காலவாரியாக

1) **1940** - நாராயணகவியின் சிக்யோத்ஸவ ப்ரபந்தம் எனும் நூலுக்கு விளக்கவுரை - திரு. வி.ஏ.ராமசாமி ஐய்யங்காரால் பதிப்பிக்கப்பட்டது.

2) **1945** - மாத்வ ஸாஹஸ ஸப்தஹம், வடமொழியில் மத்வாசாரியாரின் படைப்புகள் பற்றிய ஒரு ஆய்வு கண்ணோட்டம் - அரசு சமஸ்கிருத கல்லூரி வெளியீடு.

3) **1960** - குஹாவதார ரகசியம் - சைவப்பிரகாச சபையினால் (திருவனந்தபுரம்) வெளியிட்டது. ஆசிரியரின் ஆற்றிய சுப்ரமணியக்கடவுள் பற்றிய சொற்பொழிவுகளின் தொகுப்பாக.

4) **1963** - "ஹரிலீலா" இராமருக்கும்-கிருஷ்ணருக்கும் உள்ள ஒற்றுமை வேற்றுமைகளை, (ராமாயணம்/ஸ்ரீமத்பாகவதம்) எடுத்துரைக்கிறது. - சப்தாஹ கோல்டன் ஜீப்லி கமிற்றி திருவனந்தபுரம் வெளியீடு.

5) **1964** - வடமொழியில் லலிதா லலாம லஹரி எனும் நூல். அம்மை லலிதாதேவியின் பெருமையை விளக்குவது. - சின்மயா மையம் திருவனந்தபுரம் வெளியீடு.

6) **1965** - "சுந்தர காண்டஸ்ய சௌந்தர்யம்" சுந்தரகாண்டத்தின் முக்யத்துவத்தை, அழகை வெளிப்படுத்தும் - வடமொழிக் கவிதை நூல். - சீதாராம பக்த ஜன சபை திருவனந்தபுரம் வெளியீடு.

7) **1969** - மஹாராஜா ஸ்வாதி திருநாளின் வடமொழி இலக்கிய படைப்புகள் பற்றிய அறிமுக நூல் (ஆசிரியர் வழங்கிய சொற்பொழிவுகளின் தொகுப்பு கட்டுரை நூல்) - சில்வர் ஜீப்லி கமிற்றி சுவாதி திருநாள் மியூஸிக் அகாதமி திருவனந்தபுரம் வெளியீடு.

8) **1969** 'ஆவஹந்திஹோமம்' சமஸ்கிருதம் , தமிழ் விளக்கவுரையுடன் - ஆவஹந்தி ஹோமம் கமிற்றி வெளியீடு.

9) **1972** 'லகு சதஸ்லோகி' எளிய நடையில் சமஸ்கிருதத்தில் 100 எளிய ஸ்லோகங்களில் ஆதிசங்கரரின் 'சதஸ்லோகி' - காமகோடி ப்ரதீபம் வெளியீடு.

10) **1973** மஹாராஜா ஸ்வாதித்திருநாளின் கீழ்க்கண்ட வடமொழிப்படைப்புகளுக்கு 'ஹரிப்ரியை' எனும் மொழிபெயர்ப்பும், விளக்கவுரையும்,

(1) பத்மநாபசதகம்

(2) ஸ்யாநந்தூர புரவர்ணனம்

(3) அஜாமிள உபாக்யனம்

(4) குசேல உபாக்யானம்

வெளியீடு - ஸ்வாதித் திருநாள் பப்ளிகேஷன் கமிற்றி.

11) **1973** மஹாகணபதி ஸ்தோத்ரங்கள் - தமிழ் விளக்கவுரை - A.சுப்ரமணியபிள்ளை பதிப்பித்தது

12) **1975** 'கணபதி சகஸ்கரநாமம்' எனம் நூலுக்கு கணேசப்ரியா எனும் தமிழ் மொழிபெயர்ப்பும் , விளக்க வுரையும் - A.சுப்ரமணிய பிள்ளை பதிப்பித்தது.

13) **1978** கோபாலகிருஷ்ண சாஸ்திரிகள் எழுதிய 'சுப்ரமணிய கர்ணாம்ருதம்' எனும் நூலுக்கு குஹப்பிரியா எனும் தமிழ் மொழிபெயர்ப்பும், விளக்கவுரையும் - A.சுப்ரமணியபிள்ளை பதிப்பித்தது.

14) **1979** - 'நளோதந்தம்' எனும் நூல் நளனின் கதையை சமஸ்கிருத செய்யுட்களாக நான்கு பகுதிகளாக கூறுகிறது. கோழிக்கோடு பல்கலைக்கழகம் ப்ரி-டிகிரி கோர்ஸ் மாணவர்களுக்கு பாடபுத்தகமாக வைத்துள்ளது.

15) **1980** - 'பிரும்ம ஸத்யம் : ஜகன்மித்யா' சங்கர ஜயந்தி நாளில் நிகழ்த்திய சொற்பொழிவுகளின் தொகுப்புக்கட்டுரை, டாக்டர். வைத்திசுப்ரமணிய அய்யர் - ராஜாஅண்ணாமலைபுரம் வெளியிட்டது.

16) **1981** - விஸ்வ மஹாகவி காளிதாஸர் முதல்பாகம் ஸம்ஸ்கிருத நூல் - உரைநடையிலும், செய்யுள் வடிவிலும் ஆராய்ச்சி நூல். காளிதாஸரின் உபநிடதங்கள், புராணங்களில் இருந்த ஆழ்ந்த அறிவை பாராட்டி அவர் பெருமையை உணர்த்துவது - வெளியீடு ஸ்ரீ அபிநவ வித்யா தீர்த்த மஹாசுவாமிகள் கல்வி அறக்கட்டளை நவசுஜா-ராஜாஅண்ணாமலைபுரம், சென்னை-28.

17) **1981** 'சங்ரோதந்தம்' ஆதிசங்கரரின் வாழ்க்கை வரலாறு - மாதவீய சங்கர விஜயத்தை ஆதாரமாகக் கொண்டு எளிய 250 வடமொழி ஸ்லோகங்களில். - கையெழுத்துப்பிரதி

18) **1982** - வால்மீகி ஹ்ருதயம் / தமிழ் வடமொழி மற்றும் பிற இந்திய மொழிகள் ஆராய்ச்சி நிறுவனம் சென்னை-8 ல் நிகழ்த்திய சொற்பொழிவுகளின் தொகுப்பு நூல்.

19) 1983 - ல் ஸ்வாதி திருநாள் மஹாராஜாவின் வடமொழி படைப்பாம். 'பக்தி மஞ்சரி' (பாகவதபுராணம்) எனும் நூலுக்கு ஹரிப்ரியை - எனும் தமிழ் மொழிபெயர்ப்பும் விளக்க உரையும். (எழுத்துப்பிரதி)

20) 1983 - ராமாயணத்தில் அத்வைத சித்தாந்தம் / பாகவதத்தில் நிர்குணதத்துவம் / ஹயக்ரீய தத்துவம் இவை மூன்றும் - ஸ்ரீ ஆதிசங்கரர் அத்வைத ஆராய்ச்சி மையத்தால் வெளியிடப்பட்டது.

21) 1983 - ல் சத்வித்யா விலாஸம் என்னும் மன்னார்குடி ராஜு சாஸ்திரிகளால் இயற்றப்பட்ட ஓர் அரிதான நூலுக்கு மிக பொருத்தமான விளக்க உரையும் குறிப்புகளும் எழுதியது. - ஸ்ரீ ஆதிசங்கர அத்வைத ஆராய்ச்சி மையம் வெளியீடு.

22) 1984 - 'பாமதி திலகம்' எனும் மொழிபெயர்ப்பு / விளக்கஉரை மற்றும் குறிப்புகள். அல்லாடி சூரியின் வெளியிடப்படாத 'பாமதி விஜயம்' எனும் எழுத்து பிரதிக்கு. - ஸ்ரீ ஆதிசங்கர அத்வைத ஆராய்ச்சி மையம் - வெளியீடு

23) 1984 - ஆதி சங்கரரின் 'சதஸ்லோகி' நூலுக்கு குருப்ரியை என்ற வார்த்தைக்கு வார்த்தை - பொருளும் விளக்கவுரையும். - காமகோடி பீட ஆசார்யாள் கோல்டன் ஜூபிலி கமிற்றி வெளியீடு.

24) 1985 - வெளியிடப்படாத ஓலைச்சுவடியில் காணப்பட்ட ஸ்ரீ நாராயண தீர்த்தர் என்பவரால் இயற்றப்பட்ட 'விவரண தீபிகை' எனும் நூலுக்கு விளக்கவுரை. - சரஸ்வதி மஹால் லைப்ரரி. தஞ்சை வெளியீடு.

25) **1986** - 'ஸ்ரீமத் வராஹபுர ஸ்ரீ வேங்கடேஸ சுப்ரபாத சரணாகதி மங்கள ஸூக்தி த்ரயம்'

பூலோக வைகுண்டமாம் வரகூரில் குடிகொண்டுள்ள ஸ்ரீ வேங்கடேச பெருமாளைச் போற்றி சரணடைந்து துதிக்கும் தோத்திரங்கள் - வரகூர் வேங்கடேஸ ஸமாஜம் வெளியீடு.

26) **1986** - ஸ்ரீ நாராயண தீர்த்தர் எழுதிய ஸ்ரீ கிருஷ்ண லீலா தரங்கிணி எனும் நூலிற்கு (2 பாகங்கள்) வேங்கடேஸ ப்ரியை எனும் தமிழ் விளக்கவுரை - ஸ்ரீ நாராயண தீர்த்த எஜுகேஷனல் அண்டு சாரிடபிள் ட்ரஸ்ட், சென்னை - 28. வெளியீடு.

27) **1988** - ஸ்ரீ நாராயண கவி இயற்றிய ஸ்ரீ கிருஷ்ண சிக்யோத் ஸவ பிரபந்தம் எனும் நூலிற்கு வெங்கடேசப்ரியை எனும் தமிழ் விளக்க உரை. பிரசுரித்தோர் - ஸ்ரீ நாராயணதீர்த்த கல்வி மற்றும் அறக்கட்டளை, சென்னை.

28) **1989** - மஹாவைத்யநாத சிவன் எழுதிய மேள - ராக - மாளிகா எனும் நூலிற்கு தமிழில் மொழிபெயர்ப்பும் விளக்கவுரையும். - பிரசுரித்தோர் தி மியூஸிக் அகாதமி, 306 - டி.டி.கே.சாலை, சென்னை 14.

உ

# பொருளடக்கம்


| விஷயம் | பக்கம் |
|---|---|
| i) பதிப்புரை | |
| ii) நூல் ஆசிரியர் பற்றி | |
| 1) வணக்கம் | 1 |
| 2) குஹப்பிரஹ்மத்தின் ஸ்வரூபம் | 9 |
| 3) வாமதேவர் செய்த குஹஸ்துதி (சிவபுராணம் கைலாஸ ஸம்ஹிதையில் உள்ளது) | 16 |
| 4) தேவர்கள் செய்த ஸ்கந்தஸ்துதி சூர்ணிகா (ஸ்காந்தமஹாபுராணம் கௌமாரிகா காண்டத்திலுள்ளது) | 21 |
| 5) ஸகுணகுஹப்பிரஹ்மபிரபாவம் (ஸ்காந்தோபபுராணம் சங்கரஸம்ஹிதையில் உள்ளது) | 25 |
| 6) ஸ்கந்தபெருமானும், இதிகாஸபுராணங்களும் | 41 |
| 7) இதிகாஸபுராணங்களின் தோற்றம் | 44 |
| 8) மகரிஷிகளின் மகிமை | 45 |
| 9) இதிகாஸபுராணலக்ஷணம் | 45 |
| 10) இதிகாஸபுராணவக்த்ருலக்ஷணம் | 46 |
| 11) இதிகாஹபுராணச்ரோத்ரு லக்ஷணம் | 47 |
| 12) சிஷ்யலக்ஷணம் | 48 |
| 13) புராணங்களை பழிப்பவர்கள் அறிவிலிகள் | 49 |
| 14) கச்யபர் உபதேசம் | 55 |
| 15) மாயாதேவியின் உபதேசம் | 58 |
| 16) சுக்ராச்சாரியரின் உபதேசம் | 60 |
| 17) ஸ்ரீ ஸுப்ரமண்யபுஜங்க ஸ்தோத்திரம் (சங்கரபகவத்பாதர் இயற்றியது) | 61 |
| 18) கார்த்திகேய பிரபாவம் (மஹாபாரதம் வனபர்வத்தில் உள்ளது) | 79 |

குஹாய பரபிரஹ்மணே நம :

# गुहावताररहस्यम्

# குஹாவதார ரஹஸ்யம்

(வணக்கம்)



सेना-वल्ली-शिवा-मेना-शिवाद्रि-सुरदानवैः ।
शरकाननभू-गङ्गा-कृत्तिका-वन्हि-वायुभिः ॥
महत्तपोऽनुतिष्ठद्भिः कृतपुण्यैर्महात्मभिः ।
सम्पादितं गुहज्योतिः सदा वयमुपास्महे ॥

ஸேநாவல்லி சிவா மேனா சிவாத்ரி ஸுரதானவை :
சரகானன பூ கங்கா கிருத்திகா வந்ஹிவாயுபி :
மஹத்தபோனுதிஷ்டத்பி : கிருதபுண்யைர் மஹாத்மபி :
ஸம்பாதிதம் குஹஜ்யோதிஸ்ஸதா வயமுபாஸ்மஹே

தேவஸேனை, வள்ளியம்மை, பார்வதீதேவி, மேனா (ஹிமவானின் மனைவி) பரமசிவன், ஹிமயமலை தேவர்கள் (இந்திரன் முதலியவர்கள்) தானவர்கள் (சூரபத்மன் முதலியவர்கள்) நாணல்க்காடு, கங்காநதீ, கிருத்திகா நக்ஷத்திரங்கள், அக்னி, வாயு, ஆகிய புண்ணியம் செய்த பெரியவர்களால் உயர்ந்த தபஸ் செய்து ஸம்பாதிக்கப்பட்ட குஹனென்னும் ஜ்யோதியை எப்பொழுதும் நாம் உபாஸனை செய்கின்றோம்.

(குஹக்கடவுளின் அவதாரகாரணத்தைக் காட்டிச் செய்த வணக்கம்.)

षण्मुखं द्वादशभुजमष्टादशविलोचनम् ।
शक्तिहस्तं मयूरस्थं वन्दे कुक्कुटकेतनम् ॥

ஷண்முகம் த்வாதசபுஜமஷ்டாதச விலோசனம்
சக்திஹஸ்தம் மயூரஸ்தம் வந்தே குக்குடகேதனம்

ஆறுமுகத்தவனும் பன்னிருகைகள் உள்ளவனும் பதினெட்டு கண்கள் உள்ளவனும் வேலேந்திய கையுடயவனும் மயிலில் இருப்பவனும் சேவல்கொடியனுமான (குஹப்பெருமானை) நமஸ்கரிக்கின்றேன்.

(குஹக்கடவுளின் அவதாரஸ்வருபத்தை அனுஸந்தானம் செய்துள்ள வணக்கம்.)

देवसेनापतिं शूरपद्माद्यसुरसूदनम् ।
शिवोपदेशकं वन्दे वल्लीजानिं सुरप्रियम् ॥

தேவஸேனாபதிம், சூரபத்மாத்யஸுரஸூதனம் ।
சிவோபதேசகம் வந்தே வல்லீஜானிம் ஸுரபிரியம் ॥

தேவர்கள் படைக்குத் தலைவனும் சூரபத்மா முதலிய அஸுரர்களை நாசம் செய்தவனும் சிவபெருமானுக்கு பிரணவோபதேசம் செய்தவனும் வள்ளியின் மணாளனும் தேவர்களுக்கிஷ்டனுமான குஹக்கடவுளை வணங்குகிறேன்.

(இது குஹக்கடவுளின் அவதாரப் பிரயோஜனத்தைக் கூறிச்செய்த வணக்கம்.)

हृद्यं गुहावतारस्य रहस्यं शास्त्रबोधितम् ।
कलिदोषहरं पुण्यं वक्ष्येऽहं चित्तशुद्धये ॥

ஹ்ருதயம் குஹவதாரஸ்ய ரஹஸ்யம் சாஸ்திரபோதிகம் ।
கலிதோஷஹரம் புண்யம் வக்ஷ்யேஹம் சித்தசுத்தயே ॥

மனதைக்கவருவதும் சாஸ்திரங்களால் (வேதங்கள், இதிகாஸங்கள், புராணங்கள், உபபுராணங்கள், தர்மசாஸ்திரங்கள், தந்திரகிரந்தங்கள், திருப்புகழ் கந்தரலங்காரம் திருவகுப்பு முதலியவைகளால்) அறிவிக்கப்பட்டதும் கலியிலுள்ள தோஷங்களை அறவே அகற்றுவதும் புண்ணியத்தை தருவதுமான, குஹப்பெருமானின் திரு அவதாரத்தின் உண்மையை என் உள்ளம் தெளிவதர்க்காக யான் கூறுகிறேன்.

**श्रुतिस्मृतीतिहासपुराणाद्युपवर्णिता**
**कथा गुहस्य कल्याणी कलिकल्मषनाशिनी ॥**

சுருதிஸ்மிருதீதிஹாஸபுரணாத்யுபவர்ணிதா।
கதா குஹஸ்ய கல்யாணீ கலிகல்மஷநாசினி ।।

(தைத்தரீயாரண்யகம் முதல் பிர்ச்னம் 12-வது அனுவாகம், 112 உபநிஷத்துகளில் 53-வதான கிருஷ்ணயஜுர்வேதத்தைச் சார்ந்த ஸ்கந்தோபனிஷத், ஸாமவேதோபனிஷத்தான சாந்தோக்யத்தில் 7-வது பிரபாடகம் 26-வது கண்டம்) ஆகிய சுருதிகளாலும் (ஸ்மிருதிகௌஸ்துபம் காலஹேமாத்ரி, ஸ்மிருதி முக்தாபலம்) ஆகிய ஸ்மிருதிகளாலும் (வால்மீகி ராமாயணம் பாலகாண்டம் 35 முதல் 37 வரையுள்ள 3 ஸர்க்கங்கள், மஹாபாரதம் ஸபாபர்வத்தில் 7-11 அத்யாயங்கள், வனபர்வத்தில் 225 முதல் 233 வரை 9 அத்யாயங்கள், சல்ய பர்வத்தில் 44 முதல் 3 அத்யாயங்கள், சாந்திபர்வத்தில் 290 அத்யாயம், பீஷ்ம பர்வத்தில் கீதையில் 10-வது அத்யாயம் அனுசாஸன பர்வத்தில் விஷ்ணு ஸஹஸ்ரநாமத்தில் 49-வது அத்யாயம் ஆகிய இதிஹாஸங்களாலும், மஹாபுரணாங்களில் பிராஹ்ம புராணத்தில் பூர்வ பாகத்தில் 32 முதல் 38 வரை 7 அத்யாயங்கள் / பாத்மபுராணத்தில் 37 முதல் 41 வரை 5 அத்யாயங்கள் சிவபுராணத்தில் ஞான ஸம்ஹிதையில் 7 முதல் 19 வரை 13 அத்யாயங்கள், 35, 36 அத்யாயங்கள், கைலாஸ ஸம்ஹிதையில் 7-ம் 8-ம் அத்யாய்ங்கள், வாயவீய ஸம்ஹிதையில் 16 முதல் 20 வரை 5 அத்யாயங்கள்,

பாகவதபுராணத்தில் 10-வது ஸ்கந்தத்தில் 63-வது அத்யாயம், பவிஷ்யபுராணம், லைங்கபுராணத்தில் 99 முதல் 105 வரை 7 அத்யாயங்கள் வராஹபுராணத்தில் 20 முதல் 25 வரை 6 அத்யாயங்கள், ஸ்காந்தமஹாபுராணத்தில் மஹேச்வர கண்டத்திலுள்ள கேதாரகாண்டத்தில் 20 முதல் 31 வரை 12 அத்யாயங்கள், கௌமாரிகா காண்டத்தில் 14 முதல் 33 வரை 20 அத்யாயங்கள், நாகரகண்டத்தில் 71-வது அத்யாயம், வாமன புராணத்தில் 51 முதல் 58 வரை 8 அத்யாயங்கள், கௌர்ம புராணத்தில் 11 முதல் 16 வரை 6 அத்யாயங்கள், மாத்ஸ்யபுராணத்தில் 146 முதல் 160 வரை 15 அத்யாயங்கள், 184-வது அத்யாயம், காருட புராணத்தில் முதல் காண்டத்தில் 5-வது அத்யாயம், பிரஹ்மாண்ட புராணத்தில் உபோத்காத பாகத்தில் 10-வது அத்யாயம் என்பவையான மஹா புராணங்களாலும், உபபுராணங்களில் லக்ஷம் ச்லோகங்கள் நிறைந்த ஆறு ஸம்ஹிதைகளாக பிரிக்கப்பட்ட ஸ்காந்தோப புராணத்தில் ஏழு காண்டங்கள் கொண்ட சங்கரஸம்ஹிதை, ஸௌரோபபுராணத்தில் 61 முதல் 63 வரை 3 அத்யாயங்கள் ஆகிய உபபுராணங்களாலும், சில கிரந்தங்களில் விஷ்ணு தர்மோத்தரமென்ற கிரந்தத்தில் முதல் கண்டத்தில் 228 முதல் 235 வரையுள்ள 7 அத்யாயங்கள், ஹரிவம்சமென்னும் கிரந்தம் மஹாபாகவதத்தில் 80-வது அத்யாயம் என்ற கிலகிரந்தங்களாலும், காவ்யங்களுள் மஹாகவி காளிதாஸர் இயற்றிய குமாரஸம்பவம் என்ற பத்யகாவ்யம், ஸ்ரீ ஸ்வாமிதீக்ஷிதர் என்ற பெரியவர் இயற்றிய வல்லீ பரிணய சம்பூ என்ற சம்பூ காவ்யம் என்ற காவ்யங்களாலும், ஸ்தோத்திரக் கிரந்தங்களில், சங்கர பகவத்பாதர் இயற்றிய ஸுப்ரமண்ய புஜங்கம் முதலிய தோத்திர கிரந்தங்களாலும், கீதங்களில், ஸங்கீதமும்மூர்த்திகளுள் ஒருவரான ஸ்ரீ முத்து ஸ்வாமி தீக்ஷிதர் அவர்கள் இயற்றிய 'ஸுப்ரமண்யாய நமஸ்தே' முதலிய கீதங்கள், ஸ்ரீ ஸ்வாதிதிருநாள் இயற்றிய 'தேவமாமயி பாஹி ஷடாநந' என்று துவங்குகிற கீதமாகிய கீதங்களாலும் நன்கு வர்ணிக்கப்பட்டதும், கலியால் ஏற்படும் தோஷங்களை இல்லாமல் செய்கின்றதுமான குஹப்பெருமானுடைய கதை மிகவும் மங்களத்தைத் தரக்கூடியதாக இருக்கிறது.

केचिदेतां दूषयन्ति दोषैरारोपितैर्वृथा ।
कथैषा नैव दुष्टेति स्पष्टमत्र निगद्यते ॥

கேசிதேதாம் தூஷயந்தி தோஷைராரோபிதைர்விருதா ।
கதைஷானைவ துஷ்டேதி ஸ்பஷ்டமத்ர நிகத்யதே ॥

*சிலர் இந்த குஹக்கடவுளின் கதையை தங்களால் கற்பிக்கப்பட்ட தோஷங்களால் வீணாகப் பழிக்கின்றனர். இக்கந்தபெருமானின் கதை ஒருபோதும் குற்றமுள்ளதல்லவென்பது இந்நூலில் தெளிவாகக் கூறப்படுகின்றது.

---

*ஜோதிடம் ஆரூடம் ராமாயன பிரவசன பிரும்மஸ்ரீ முல்லக்குடி .ஸுந்தரேச சாஸ்திரிகள் தானியற்றிய 'புராண விமர்சன' மென்னும் நூலில் 16, 17 பக்கங்களில்- ' சுமார் 800 வருஷங்களுக்கு முன்பு சைவவைணவ மதம், தாண்டவமாடும்போது, ஸ்ரீபெரும்புதூரில் ராமானுஜர் பிறந்த வைஷ்ணவ மதத்தை ஸ்தாபித்து பிரசாரம் செய்து பிரபலமாய் இருக்கும் காலத்தில் காஞ்சீபுரத்தில் குருக்கள் சமூகத்தில் ஒருவர் கச்சியபசிவாச்சாரியார் என்கிற புலவர் சைவமதம் வீணாகிவிடுமோ என்று பயந்து தனது கவித்திறமையால் தமிழில் செய்யுள் பாடி அதர்க்கு தகுந்தாற்ப்போல் மொழிபெயர்க்கும் சக்தியுடைய வடமொழிப் புலவரையும் வைத்துக்கொண்டு, தான் எழுதின தமிழ்க்கவிக்குச் சரியான சுலோகத்தை எழுதும்படி செய்து ஸ்கந்தபுராணம் உண்டாக்கினார் என்பதுறுதி' என்று எழுதியிருக்கிறார்கள். மேற்ப்படி புத்தகத்தில் மேலும் 28, 29 பக்கங்களில் 'ஸுப்ரமணியர் கல்யாணம் கிடையாதென்று எனக்கு திடமான தீர்மானம். பின் ஏன் ஸ்கந்தபுராணம் வேண்டும். அதில் சூரபத்மன், ஸிம்மவக்த்ரன், தாரகன், அஜாமுகி, பானுகோபன் இவைகள் எப்படி என்றால் அவ்வளவும் வால்மீகி ராமாயணத்தின் கதைக்கு எதிரிடை ராவணன் கும்பகர்ணன் அங்கு சூரபத்மன் ஸிம்மவக்த்ரன் தாரகன் இங்கு இந்திரஜித் சூர்பணகை அங்கு பானுகோபன் அஜாமுகி இங்கும், லங்கை அங்கும், அதே லங்கை என்றதைத்தான் சொல்லுகிறது.

இங்கு முதலாவதாக குஹப்பெருமானின் ஸ்வரூபத்தைச் சிறிது கூறிவிட்டு-ச்சிலரால் கூறப்பட்டுள்ள குற்றச்சாட்டுகளுக்கு சரியான மறுப்புத்தருவோமாக.

ஸ்ரீ குஹாவதார ரஹஸ்யமெனப் பெயர் பெறும் இந்நூல் பரமசிவன் புதல்வனென்றும் சரவணபவனென்றும் தேவஸேனாதிபதியென்றும் தாரகாரி என்றும் சூராந்தகன் என்றும் வள்ளிகாந்தன் என்றும் பலவிதமாய் தேசகாலங்களுக்குச் சம்பந்தப்படுத்தி புராணாதிகளில் கூறப்படும் ஸ்ரீகுஹக்கடவுளின் உண்மை சொரூபத்தை நன்கு விள்க்குவதொன்றாகும்.

ஸ்ரீ குஹப்பெருமானுக்கு உண்மைவடிவம், உண்மையல்லாத வடிவம் என்று இரண்டு வடிவங்கள் உள்ளன. பெரும்பாலும் இதிகாஸபுராணங்களில் உண்மையல்லாத வடிவமே தேசகாலங்களுக்குச் சம்பந்தப்படுத்திக் கூறப்பட்டிருக்கிறது.

வேதங்கள் இதிஹாஸங்கள், புராணங்கள், உபபுராணங்கள், தர்மசாஸ்திரங்கள், தந்திரகிரந்தங்கள், இவைகளனைத்திர்க்கும் அஸங்க அகண்ட ஸச்சிதானந்த பூர்ணாத்வைத நிர்குணப்பிரஹ்மத்திலேயே முக்கியமான தாத்பர்யமென்பது பரமஸித்தாந்தமாகும்.

அப் பரம்பொருளையடைவதற்கு கர்ம உபாஸனை முதலியவைகள் உபாயங்களானது பற்றி அவைகளிலும் அவாந்தரமான தாத்பரியமுள்ளதென்பது பெரியவர்களின் ஸிந்தாந்தம்.

ஆகவே உண்மையுள்ளது ஒரே பொருள். அது பரமசிவனாகுக குஹகனாகுக சத்சக்தியாகுக மற்றும் கணேசஸூர்யாதிகளாகுக. இங்ஙனமின்றி ஒனறுக்கு மேற்ப்பட்ட தேவர்களைக் கூறும் விவகாரக்கூற்று உண்மைக்கு புறம்பான கற்பனையேயாகும்.

ராமராவணயுத்தம் எப்படி இருக்கின்றதென்றால் ராமராவணயுத்தம் மாதிரியே தான் என்று சொல்லியிருக்கின்றார் வால்மீகி இங்கும் 'ஸகந்த தாரகயோர் யுத்தம் ஸ்கந்த தாரகயோரிவ' என்று தான் சொல்லியிருக்கிறார். ஆகையால் தான் டூப்ளிகேட் என்று சொல்ல வேண்டும்' என்று எழுதியிருக்கிறார்கள்.

சாஸ்திரங்களில் ஸ்வரூபலக்ஷணம் தடஸ் தலக்ஷண மென்று இருவகை லக்ஷணம் கூறப்படுகின்றது. என்றும் மாறாத உண்மைச் சொரூபமே ஸ்வரூப லக்ஷணம், தேசகால விவகார விவஸ்தைகளுக்குச் சம்பந்தப்படுத்தி கூறப்படும் கற்பனை வடிவமே தடஸ்தலக்ஷணம்.

வாக்கிற்கும் மனதிற்கும் எட்டாததும் தேசகால வியவஹார விவஸ்தைகளுக்கு அதீதமாய் விளங்குவதுமான ஒரே பொருள் கற்பனா வடிவத்தோடு விளங்குவதற்கும், வேதங்கள், இதிகாஸங்கள் புராணங்கள் அங்ஙனம் கூறுவதற்கும் காரணம் பின்வருமாறு அறிய வேண்டும்.

यतीनां मन्त्रिणां चैव ज्ञानिनां योगिनां तथा ।
ध्यानपूजानिमित्तं हि तनूं गृह्णाति लीलया ॥

யதீனாம் மந்திரிணாம் சைவ ஞானினாம் யோகினாம் ததா
தியான பூஜா நிமித்தம் ஹி தனூம் கிருண்ஹாதி லீலயா

என்னும் பிரமாணத்தை அனுஸரித்து ஸந்யாஸிகள், மந்திர ஜபம் செய்கிறவர்கள், ஞானிகள், யோகிகள் முதலியவர்கள் தியானம் செய்வதற்கும் பூஜிப்பதற்கும் அப்பிரஹ்மமானது விளையாட்டாக ஒரு சரீரத்தை கிரஹித்துக்கொண்டு விளங்குகின்றது என்று ஏற்படுகிறது, அன்றியும்

निर्विशेषं परं ब्रह्मसाक्षात्कर्तुमनीश्वराः
ये मन्दास्तेऽनुकम्प्यन्ते सविशेषनिरूपणैः ।
वशीकृते मनस्येषां सगुणब्रह्मशीलनात्
तदेवाविर्भवेत्साक्षादपेतोपाधिकल्पनम् ॥

நிர்விசேஷம் பரம்பிரஹ்மஸாக்ஷாத்கர்த்துமனீச்வரா |
யேமந்தாஸ்தேனுகம்ப்யந்தேஸவிசேஷநிருபணை :
வசீகிருதே மனஸ்யெஷாம் ஸகுணபிரஹ்ம சீலனாத்
ததேவாவிர்பவேத்ஸாக்ஷாதபேதோபாதி கல்பனம்

என்ற பிரமாணம் - தேசகால வியவகாராதி விசேஷணங்களோடு கூடிய சகுண பிரஹ்மோபாஸனையால்தான் நிர்குணபிரஹ்மத்தை அறியமுடியும். ஆதலின் நிர்குணப்பிரஹ்மத்தையறிவதற்கு ஆற்றலில்லாத மந்த மதியாளர்களின்பொருட்டு ஸகுணப்பிரஹ்மமும் (அதையடைவதற்கான தர்மங்களும்) இதிஹாஸபுராணங்களில் நிரூபிக்கப்பட்டிருக்கின்றன என்று கூறுகிறது.

ஆகவே நிர்குணகுஹப்பிரஹ்மத்திற்கு சிவகுமாரன், பார்வதீந்நதனன், ஷண்முகன், சரவணபவன், கார்த்திகேயன், காங்கேயன், அக்நி பூ தேவஸேனாபதி தாரகாரி, கிரௌஞ்சபித் ஸிம்ஹவக்த்ராந்தகன், சூரஸம்ஹாரீ, ஸ்கந்தன், ஸுப்பிரம்ஹண்யன் சுவாமினாதன், வள்ளிகாந்தன் என்று பல நாமங்களால் கூறப்படும் குஹப்பிரஹ்ம்த்தின் கற்பனை வடிவமான ஸகுண ரூபமும், அதன் இதிஹாஸமும் மந்தமதிகளான மனிதர்கள் தன்னை வந்தடைய கந்தன் தனது கருணையால் தோற்றிவைக்கப்பட்டதென்று முக்காலமும் உணர்ந்த முனிவர் கூறுகின்றனர்.

"स्यात्परमेश्वरस्यापि, इच्छावशात् मायामयं रूपं साधकानुग्रहार्थं" (ब्र सू भा 1-1-7)

ஸ்யாத்பரமேச்வரஸ்யாபி இச்சாவசாத் மாயாமயம் ரூபம் ஸாதகானுக்ரஹார்த்தம்
(பிரும்ம ஸூத்திர பாஷ்யம் - 1 - 1 - 7)

'எல்லா காலத்திலும் எல்லா தேசத்திலும் எல்லா பொருளிலும் நிறைந்திருக்கின்ற கடவுளுக்கு தனது விருப்பத்தால் பக்தர்களை அனுக்ரஹிப்பதற்காக கற்பனைவடிவம் ஏற்படுகின்றது' என்று சங்கர பகவத் பாதர்கள் கூறியிருக்கின்றார்.

"मायाह्येषा मया सृष्टा यन्मां पश्यसि नारद
सर्वभूतगुणैर्युक्तं मैवं मां द्रष्टुमर्हसि"

மாயாஹ்யேஷா மயாஸ்ருஷ்டா
யன்மாம் பச்யஸி நாரத
ஸர்வபூத குணைர்யுக்தம்
மைவம் மாம் திரஷ்டுமர்ஹஸி

ஏ நாரதா ! ஸகுண வடிவமான என்னை நீ காண்கிறாய் என்பது என்னால் தோற்றிவைக்கப்பட்ட மாயையே தவிர வேறில்லை. இவ்விதம் என்னை சகல பூத குணங்களுடன் கூடியவனாக பார்ப்பது கூடாது. (நிர்குணமான பிரஹ்ம வஸ்துவென்று என்னைக்காண்பதே காண்பதாகும்) என்று கண்ணன் தேவரிஷியான நாரதரிடம் கூறியதாக வியாஸ மகரிஷி அறிவிக்கிறார்.

## குஹப்பிரஹ்மத்தின் ஸ்வரூபம்

सत्यं ज्ञानमनन्तं ब्रह्म। यो वेद निहितं गुहायां परमे व्योमन्।
सोऽश्नुते सर्वान्कामान्सह ॥ [तै-उ-आ-वल्ली]

ஸத்யம் ஞானமனந்தம் பிரஹ்ம! யோ வேத நிஹிதம் குஹாயாம் பரமே வ்யோமன் ! ஸோச்னுதே ஸர்வான் காமான் ஸஹ (தைத்தரீய உபநிஷத்)

புத்தி குஹையாகும் பரமாகாசத்தில் ஸச்சிதானந்த பிரஹ்ம ஸ்வரூபனான குஹனை எவன் அறிகின்றானோ அவன் ஸர்வகர்மங்களையும் அடைகிறான் என்று தைத்தீரிய உபநிஷத் பறைசாற்றுகின்றது.

गुहेति दहराकाशो वेदान्तेषु हि पठ्यते ।
तन्निष्ठोऽयं गुहः प्रोक्तः सर्वहृत्कमलासनः ॥

குஹேதி தஹராகாச : வேதாந்தேஷு ஹி பட்யதே
தன்னிஷ்டோயம் குஹ : ப்ரோக்த : ஸர்வஹ்ருத்கமலா ஸன

வேதாந்தங்களில் தஹராகாசமானது குஹையென்று கூறப்பட்டுள்ளதன்றோ ! ஆகவே ஸகலபிராணிகளின் ஹ்ருதய கமலங்களில் வஸிப்பவன் குஹன் எனப்படுகின்றான்' என்று அறிவாளிகள் கூறுகின்றனர்..

"सुब्रह्मण्योँ सुब्रह्मण्योँ सुब्रह்मण्योँ" [तै आ. प्र. प. १२]

*"ஸுப்பிரஹ்மண்யோம் ஸுப்பிரஹ்மண்யோம்*

ஸுப்பிரஹ்மண்யோம்" (தைத்தரீயாராண்யகம்)

வேதங்களுக்கு ஹிதம் செய்து கொண்டு பிரகாசிக்கின்ற தேவன் என்று தைத்தரீய ஆரண்யகத்தில் அழைக்கப்படுகின்றவனும் குஹப்பெருமானேதானென்று கொள்ள வேண்டும்.

सुब्रह्मण्यो स्वरस्यार्थस्त्वं चाहं च सदाशिवोम्
इति जानन्ति ये लोके ते यान्ति मम तुल्यताम्

ஸுப்பிரஹ்மண்யோம் ஸ்வரஸ்யார்த்த :
த்வம் சாஹம் ச ஸதாசிவோம்
இதி ஜானந்தி யே லோகே தே யாந்தி மம துல்யதாம்

" வேதத்தில் ஸுப்பிரஹ்மண்யோம்" "ஸதாசிவோம்" என்று சொன்னபடி நீயும் நானும் பிரணவத்தின் பொருளாகின்றோம். என்று குழந்தைவடிவம் தாங்கிய் குஹக்கடவுளிடம் சிவபெருமான் கூறியதாக ஸ்காந்தபுராணம் சங்கரஸம்ஹிதை கூறியது மிகவும் கவனிக்கத்தகுந்தது.

**अच्युतोऽस्मि महादेव तव कारुण्यलेशतः**
**विज्ञानघन एवास्मि शिवोस्मि किमतः परम्**
**तुषेण बद्धो व्रीहिः स्यात्तुषा भावेन तण्डुलः**
**एवं बद्धस्तथा जीवः कर्मनाशे सदाशिवः**
**[स्कन्दोपनिषत्]**

அச்தோஸ்மி மஹாதேவா தவ காருண்யலேசசத :
விச்யானதன ஏவாஸ்மி சிவோஸ்மி கிமத : பரம்
துஷேண பத்தோ ப்ரிஹி : ஸ்யாத்துஷா பாவேன தண்டுல :
ஏவம் பத்தஸ்ததா ஜீவ : கர்மநாசே சதாஸிவ : (ஸ்கந்தோபநிஷத்)

ஹே மஹாதேவ ! உனது கருணையின் லேசத்தால் யான் அழிவற்றவனானேன், அறிவுஉருவமானேன், ஆனந்தவடிவமாய் நிற்கின்றேன், என்னையன்றி வேறோன்றுமில்லை.

உமியுடன் சேர்ந்தது நெல். உமியைப் போக்கடித்தால் அரிசி. இவ்வாறு கர்மங்களால் கட்டுண்டவன் ஜீவன். கர்மங்கள் ஒழிந்தபின் எப்பொழுதுமவன் ஆனந்தவடிவமே என்று ஸ்கந்தனே தன் அனுபவத்தை கூறியிருக்கிறார். ஸ்கந்தர் கூறிய காரணத்தாலேயே ஸ்கந்தோபநிஷத் என்ற பெயர் ஏர்ப்பட்டதென்றறிக.

"तस्मै मृदितकषायाय तमसः पारं दर्शयति सनत्कुमारः
तं स्कन्द इत्याचक्षते तं स्कन्द इत्याचक्षते ॥

[छा. उप. ७. प्र. २६. ख.]

தஸ்மை ம்ருதிதகஷாயாய தமஸ : பாரம்
தர்சயதி ஸனத்குமார :தம் ஸ்கந்த இத்யா-
சக்ஷதே தம் ஸ்கந்த இத்யாசக்ஷதே
(சாந்தோக்யோபநிஷத் 7-வது அத்தியாயம்)

மலமற்ற மனமுடைய நாரத முனிவருக்கு அக்ஞானத்தின் (இருளின்) எல்லையை பரம்பொருளான பரமாத்ம ஜ்யோதியைக் காண்பித்தார் (அனுபவிக்கச் செய்தார்) இந்த *ஸனகுமாரரை ஸ்கந்தரென்று அறிவாளிகள் சொல்கின்றனர் என்று ஸாம வேதத்திலுள்ள சாந்தோக்யோபநிஷத்தில் 7-வது பிரபாடகத்தில் 26-வது கண்டத்தில் கூறப்பட்டுள்ளது இச்சந்தர்ப்பத்தில் நினைவுக்கு கொண்டு வரத்தக்கது.

"स्कन्दः स्कन्दधरो धुर्यो वरदो वायुवाहनः"
"करणं कारणं कर्ता विकर्ता गहनो गुहः" ॥

ஸ்கந்த :ஸ்கந்ததரோ துர்யோ வரதோ வாயுவாஹன :
கரணம் காரணம் கர்தா விகர்தா கஹனோ குஹ :

*ஸுப்ரம்ஹண்ய ஷடாக்ஷர மந்திரத்திற்கு - ஸனத்குமாரர் ரிஷியாவார்.

स्कन्दति अमृतरूपेण स्रवतीति स्कन्दः

ஸ்கந்ததி அமிருதரூபேண ஸ்ரவதீதி ஸ்கந்த :

'गूहते संवृणोति स्वरूपादि निजमाययेति गुहः ॥

கூஹதே ஸம்விருணோதி ஸ்வரூபாதி நிஜமாயயேதி குஹ :-

"ஆனந்தரூபத்தோடு பெருகுகின்றது" தனது மாயையால் உண்மைஸ்வரூபம் முதலியவற்றை மறைத்துக்கொள்கிறது என்றும் முறையே விஷ்ணுஸஹஸ்ரநாமத்திலுள்ள ஸ்கந்த பதத்திற்கும் குஹபதத்திற்கும் ஸ்ரீ சங்கரபகவத் பாதர்களால் பொருள் கூறப்பட்டது கவனிக்கத்தக்கது.

बहुधा चैकधा चैव कृत्वात्मानं महात्मना
शक्तिः क्षिप्ता रणे तेन पाणिमेति पुनः पुनः
एवंप्रभावो भगवानतो भूयश्च पावकिः
केचिदेनं व्यवस्यन्ति पितामहसुतं विभुम्
सनत्कुमारं सर्वेषां ब्रह्मयोनिं तमग्रजम्
केचिन्महेश्वरसुतं केचित्पुत्रं विभावसोः
उमायाः कृत्तिकायाश्च गङ्गायाश्च वदन्त्युत
एकधा च द्विधा चैव चतुर्धा च महाबलम्
योगिनामीश्वरं देवं शतधा च सहस्रधा
सेनानीश्च कृतो राजन्बाल एव महाबलः

[महा·भा-शल्य-पर्व ४१ अ]

பகுதா சைகதா சைவ கிருத்வாத்மானம் மஹாத்மனா
சக்தி : க்ஷிப்தா ரணே தேன பாணிமேதி புன : புன :
ஏவம் பிரபாவோ பகவானதோ பூயச்ச பாவகி :

கேசிதேனம் வியவஸ்யந்தி பிதாமஹ ஸுதம் விபும்
ஸநத்குமாரம் ஸர்வேஷாம் பிரஹ்மயோனிம் தமக்ரஜம்
கேசின்மஹேச்வரஸுதம் கேசித்புத்ரம் விபாவஸோ :
உமாயா : கிருத்திகாயாச்ச கங்காயாச்ச வதந்தியுத
ஏகதாச த்விதாசைவ சதுர்தா ச மஹாபலம்
யோகினாமீச்வரம் தேவம் சததா ச ஸஹஸ்ரதா
ஸேநாநீச்ச கிருதோ ராஜன் பால ஏவ மஹாபல :
(மஹாபாரதம் சல்யபர்வம் 41வது அத்யாயம்)

மஹாத்மாவான குஹனால் தன்னை ஒன்றாகவும் பலவாறாகவும் கற்பித்துக்கொண்டு போரில் அஸுரர்களை நாசம் செய்யும் பொருட்டு எறியப்பட்ட சூலாயுதம் அஸுரரை நாசம் செய்து உடனுடனே குஹப்பெருமானின் கையை வந்தடையும். இந்த நிகழ்ச்சி மிக்க ஆச்சர்யமுள்ளதாக இருந்தது.

இம்மாதிரி மகிமை வாய்ந்த குஹப்பெருமான் எல்லாக் காலத்திலும் எல்லா தேசத்திலும் எவ்விதக் காரணத்தாலும் தடைபடாததான ஐச்வர்யம் , தர்மம். யசஸ், ஸ்ரீ, ஞானம், வைராக்யம், ஆகியவைகளை அடைந்தவரும், பிராணிகளின் தோற்றம், மறைவு, போகுதல், வருதல், அறிவு, அறியாமை இவைகளை நேரில் உணர்கின்றவருமான பகவானென்ற பெயடைய பரமாத்மா ஆனவன். அக்னிக்கு அக்னிபோன்றவனாய் அக்னியில் தோன்றிய குஹன் யாவருக்கும் மேலானவன்.

இந்த குஹனை சிலர் பிரஹ்மதேவனுடைய மூத்த குமாரனான ஸனத்குமாரனென்று நிச்சயிக்கிறார்கள். சிலர் சிவகுமாரனென்றழைக்கின்றனர். வேறு சிலர் அக்னியின் புதல்வனெனப் புகழ்கின்றனர். உமையின் மைந்தனென்றும் கிருத்திகைகளின் குழவி என்றும் கங்கையின் பாலனென்றும் வர்ணிக்கின்றனர்.

ஒன்றாகவும், இரண்டாகவும், நான்காகவும், நூறாகவும், ஆயிரமாகவும் பிரகாசிக்கிற மஹாபலசாலியான குஹனை யோகிகளுக்கு (மனதையொடுக்கி ஸமாதியிலிருப்பவர்களுக்கு) பயனையளிக்கு ஈச்வரரென்று மஹான்கள் தீர்மானிக்கின்றனர்)

சிறுகுழந்தைப் பருவத்திலேயே மஹாபலசாலியான குஹன் தேவ சேனையின் தலைவனாக்கப்பட்டான்.

என்று மஹாபாரதத்தில் சல்யபர்வத்தில் 41-வது அத்யாயத்தில் கூறப்பட்டிருக்கிறது. யோகிகளால் ஸமாதியில் அனுபவிக்கப்படுவதும் பலவாறாக தோன்றும் ஒரேபொருளான பரமாத்மா குஹனே என்று உண்மையை மிகத்தெளிவாய் இதிஹாஸ புராணங்களின் கர்த்தாவான வேதவியாஸர் உரைத்தது மிக்க பொருத்தமானதென்றறிக.

ददामि सेनानाथं वो देवा भवत विज्वराः
शक्तिं संक्षोभयामास पुत्रहेतोः परन्तपः ॥
तस्य क्षोभयतः शक्तिं ज्वलनार्कसमप्रभः
कुमारः सहजां शक्तिं बिभ्रद्ज्ञानमयीमभूत्
उत्पत्तिरस्य राजेन्द्र बहुरूपा व्यवस्थिता
मन्वन्तरेष्वनेकेषु देवसेनापतिः किल (वराहपुराणे २५ अध्याये)

ததாமி ஸேனாநாதம் வோ தேவா பவத விஜ்வரா :
சக்திம் ஸம்க்ஷோபயாமாஸ புத்ரஹேதோ : பரந்தப :
தஸ்ய க்ஷோபயத : சக்திம் ஜ்வலநார்க்கஸமப்ரப :
குமார :ஸஹஜாம் சக்திம் பிப்ரத்ஞானமயீமபூத்
உத்பத்திரஸ்ய ராஜேந்திர பஹுரூபா வ்யவஸ்திதா
மன்வந்தரேஷ்வனேகேஷு தேவஸேனாபதி : கில
(வராஹபுராணம் 25-ம் அத்யாயம்)

ஹே தேவர்களே கவலையடைதீர்கள், உங்கள் படைக்கோர் தலைவனைத் தருகின்றேன். (என்று கூறி) புதல்வனை அடையும்பொருட்டு தனது சக்தியைச் சிறிது சலிக்கும்படி செய்தார். அவ்வாறு சக்தியை சலிக்கும்படி செய்கின்ற பரமசிவனுக்கு ஸூர்யனுக் கொப்பான ஒளியுடன் கூடிய குமாரன் தன்னுடன் பிறந்த ஞானவடிவமான சக்தியைத்தரித்தவனாகத் தோன்றினான்.

இந்த குஹனுடைய தோற்றமானது பலவிதமாகத் தீர்மானிக்கப்பட்டிருக்கிறது. ஏனென்றால் இவர் பல மன்வந்தரங்களில் தேவர் படைத்தலைவராகத் தோன்றியவர் அல்லவா: என்று வராஹபுராணத்தில் 25-வது அத்யாயத்தில் கூறப்பட்டிருக்கிறது.

न जानामि शब्दं न जानामि चार्थं
न जानामि पद्यं न जानामि गद्यम् ।
चिदेका षडास्या हृदि द्योतते मे
मुखान्निसरन्ते गिरश्चापि चित्रम् ॥

ந ஜானாமி சப்தம் ந ஜானாமி சார்த்தம்
ந ஜானாமி பத்யம் ந ஜானாமி கத்யம்
சிதேகா ஷடாஸ்யா ஹ்ருதி த்யோததே மே
முகாந்நிஸ்ஸரந்தே கிரச்சாபி சித்ரம்

சொல்லையும் அறியேன், பொருளையும் அறியேன், பாட்டையும் அறியேன், வசனத்தையும் அறியேன். என்னுள்ளத்தில் ஒரு ஜ்யோதியைக் காண்கின்றேன். அதை ஆறுமுகத்தோடு காண்கின்றேன். என் நாவிலிருந்து சொற்களும் வெளிவருகின்றன. ஆச்சர்யம் நான் வ்ாக்கை மனத்தில் அடக்கி மனத்தை குஹபிரஹ்மத்தில் ஒடுக்கி மெய்மறந்திருக்கும் பொழுது எந்நாவிலிருந்து குஹப்பெருமானே இந்த தோத்திரத்தை வெளியீடுகிறார் என்று சுமார் 2000 ஆண்டுகளுக்கு முன்தோன்றிய சங்கரபகவத்பாதர் திருச்செந்தூரில் சென்று முருகன் ஸந்நிதியில் நின்று மெய்மறந்து பாடிய ஸுப்ரஹ்மண்ய புஜங்கமென்னும் தோத்திரத்தில் உள்ள முதல் சுலோகம் அறிவிக்கின்றது.

"श्री बालसुब्रह्मण्य, आगच्छ अग्रगण्य श्रीसच्चिदानन्द नाथ वरेण्य"

"ஸ்ரீ பாலஸுப்ரஹ்மண்ய ஆகச்ச அக்ரகண்ய ஸ்ரீ ஸச்சிதாநந்த நாத வரேண்ய" ஹே பாலஸுப்ரஹ்மண்ய! ஸச்சிதாநந்த வடிவமே நாதா! (எல்லோராலும்) பூஜிக்கத்தகுந்தவனே

முதலில் கௌரவிக்கத் தகுந்தவனே" என்று ஸங்கீத மும்மூர்த்திகளுள் ஒருவரான ஸ்ரீ முத்துஸ்வாமி தீக்ஷிதர் அவர்கள் மனமுருகிப் பாடிய பாட்டும் இங்கு நினைவில் சேர்த்துக்கொள்ள வேண்டும்.

## वामदेवकृता गुहस्तुतिः

(வாமதேவர் செய்த குஹஸ்தோத்திரம்)

(மேருமலையில் தென்புறத்திலுள்ள குமாரசிகரத்தில் ஸ்கந்தஸரஸ்" என்னும் புஷ்கரணியில் தன் சிஷ்யர்களுடன் வாமதேவர் ஸ்நானம் செய்து இத்தோத்திரத்தைக் கூறி குஹக்கடவுளின் அருள் பெற்றார் என்று சிவபுராணம் கைலாஸஸம்ஹிதை 7-வது அத்யாயம் கூறுகிறது.)

**ओं नमः प्रणवार्थाय प्रणवार्थविधायिने ।**
**प्रणवाक्षरपीठाय प्रणवाय नमो नमः ।**

ஓம் நம : பிரணவார்த்தாய பிரணவார்த்தவிதாயினே
பிரணவாக்ஷரபீடாய பிரணவாயநமோ நம :

ஓங்காரத்தின் பொருளாயும், ஓங்காரத்தின் பொருளைத் தீர்மானித்துக் கூறுகிறவரும், ஓங்காரமென்னும் அக்ஷரத்தைத் தன்னிருப்பிடமாகச் செய்து கொண்டவரும் ஓங்கார வடிவமானவருமான குஹப் பெருமானுக்கு பல தடவை நமஸ்காரங்கள்.

**वेदान्तार्थस्वरूपाय वेदान्तार्थविधायिने ।**
**वेदान्तार्थविदां नित्यं विदिताय नमो नमः ॥**

வேதாந்தார்த்தஸ்வரூபாய வேதாந்தார்த்தவிதாயினே
வேதாந்தார்த்தவிதாம் நித்யம் விதிதாய நமோ நம :

வேதாந்தங்களின் பொருளாக இருப்பவரும் வேதாந்தங்களின் உட்பொருளைத் தெளிவாக கூறுகின்றவரும், வேதாந்தங்களின் உட்பொருளை நன்குணர்ந்தவர்களால் எப்பொழுதும் அறியப் பட்டவருமான குஹக்கடவுளுக்குப் பல தடவை நமஸ்காாங்கள்.

**नमो गुहाय भूतानां गुहासु निहिताय च ।**
**गुह्याय गुह्यरूपाय गुह्यागमविदे नमः ॥**

நமோ குஹாய பூதானம் குஹாஸு நிஹிதாய ச
குஹ்யாய குஹ்யரூபாய குஹ்யாகமவிதே நம :

பிராணிகளுடைய ஹ்ருதயகுஹைகளில் இருப்பவனும் மிகவும் ரஹஸ்யமாய் இருப்பவனும், ரஹஸ்யமான உருவமுள்ளவனும், ரஹஸ்யமான வேதங்களை உணர்ந்தவனுமான குஹப்பெருமாளுக்கு பல தடவை நமஸ்காரங்கள்.

अणोरणीयसे तुभ्यं महतोपि महीयसे ।
नमः परावरज्ञाय परमात्मस्वरूपिणे ॥

அணோரணீயஸே துப்யம் மஹதோபி மஹீயஸே
நம : பராவரக்ஞாய பரமாத்மஸ்ரூபிணே

மிகச்சிறிய பொருளுக்குள் மிகச் சிறிய பொருளாயிருப்பவனும், மிகப்பெரிய பொருளுக்குள் மிகப்பெரிய பொருளாக இருப்பவனும், உயர்ந்தவர்கள், தாழ்ந்தவர்கள் என்ற எல்லா ஜீவராசிகளையும் உணர்நதவனும் பரமாத்மாவின் பரிபூர்ண வடிவம் தாங்கியவனுமான ஹே குஹக்கடவுளே உன் பொருட்டு நமஸ்காரா்.

स्कन्दाय स्कन्दरूपाय सिन्दूरारुणतेजसे ।
नमो मन्दारमालोद्यन्मुकुटादिभृते सदा ॥

ஸ்கந்தாய ஸ்கந்தரூபாய ஸிந்தூ ராருணதேஜஸே
நமோ மந்தாரமாலோத்யன்முகுடாதிபிருதே ஸதா

ஆனந்தவடிவமாய் எங்கும் பெருக்கெடுத்திருப்பவனும் குங்குமம்போல் சிவந்த ஒளியுடன் கூடினவனும் நந்தனவனத்திலுள்ள மந்தாரப் பூமாலையால் பிரகாசிக்கின்ற கிரீடம் முதலிய ஆபரணங்களைத் தாங்கியவனுமான கந்தபெருமானுக்கு எப்பொழுதும் நமஸ்காரம்.

शिवशिष्याय पुत्राय शिवस्य शिवदायिने ।
षडाननशरीराय षड्विधार्थविधायिने ॥

சிவசிஷ்யாய புத்ராய சிவஸ்ய சிவதாயினே
ஷடாக்ஷரசரீராய ஷட்விதார்த்தவிதாயினே

பரமசிவனைச் சிஷ்யனாகப் பெற்றவரும் சிவபெருமானுடைய புதல்வரும் (யாவர்க்கும்) மங்களத்தைத் தருகின்றவரும் ஆறு அக்ஷரங்கள் கொண்ட மந்திரத்தையே உடலாகக்கொண்டவரும் (1) ஐச்வர்யம் (2) தர்மம் (3) புகழ் (4) ஸ்ரீ : (5) அறிவு (6) வைராக்யம் ஆகிய ஆறுவிதமான பொருளைத் தருகின்றவருமான குஹனுக்கு நமஸ்காரம்

शिवप्रियाय शिवयोरानन्दनिधये नमः ।
गाङ्गेयाय नमस्तुभ्यं कार्तिकेयाय धीमते ॥

சிவப்பிரியாய சிவயோரானந்தநிதியே நம :
காங்கேயாய நமஸ்துப்பம் கார்த்திக்கேயாய தீமதே

பரமசிவனுக்கு இஷ்டமானவனும் பார்வதீபரமேசுவரர்களின் அன்பிற்கு புதையலாக இருப்பவனும், கங்கையின் புதல்வனும், கிருத்திகா நக்ஷத்திரங்களின் திருமகனும், அறிவாளியுமான (ஹே குஹ) உன்பொருட்டு நமஸ்காரம்.

मातृपुत्राय महते शरकाननशायिने
षडध्वातीतरूपाय षण्मुखाय नमो नमः ॥

மாத்ருபுத்ராய மஹதே சரகானனசாயினே
ஷடத்வாதீத ரூபாய ஷண்முகாய நமோ நம :

1. பிராம்ஹீ, 2. வைஷ்ணவி, 3. மாஹேச்வரீ, 4. கௌமாரீ, 5. வாராஹீ, 6. நாரஸீம்ஹீ, 7. ஐந்த்ரீ ஆகிய ஸப்த மாதாக்களால் வாத்ஸல்யத்தால் புதல்வனென்று கருதப்பட்டவரும், [illegible] நாணல்க்கா[illegible] [illegible]டுத்திரு[illegible] : 1. மூலாதாரம் 2. ஸ்வாதிஷ்டானம் 3. மணிபூரகம் 4. அநாஹதம் 5. விசுத்தி 6. ஆக்ஞா என்ற ஆறு வழிக்கும் மேலான ஸஹஸ்ராரத்தில் நிற்க்கும் பரம்பொருள் வடிவமானவனுமான ஆறுமுகத்தோனுக்கு அனேகம் நமஸ்காரங்கள்.

द्वादशायतनेत्राय द्वादशायतबाहवे ।
द्वादशायुधधाराय द्वादशात्मन्नमोऽस्तुते ॥

த்வாதசாயதநேத்ராய த்வாதசாயதபாஹவே
த்வாதசாயுததாராய த்வாத்சாத்மந்நமோஸ்துதே

அகன்ற பன்னிரண்டு கண்கள் படைத்தவனும் அகன்று (நீண்ட) பன்னிருபுஜங்களை யடைந்தவனும், பன்னிரண்டு ஆயுதங்களைத்தரித்தவனுமான பன்னிரண்டாதித்யவடிவமாய் நிற்கின்ற ஹே குஹக்கடவுளே உன்பொருட்டு நமஸ்காரம்.

चतुर्भुजाय शान्ताय शक्तिकुक्कुटधारिणे ।
वरदाभयहस्ताय नमोऽसुरविदारिणे ॥

*சதுர்புஜாய சாந்தாய சக்திகுக்குடதாரிணே*
வரதாபயஹஸ்தாய நமோஸுரவிதாரிணே

சூலம், சேவல், வரம்தருதல், பயத்தை நீக்குதல், என்ற அடையாளத்துடன் கூடின நான்கு கரங்கள் கொண்டவனும் அஸுரர்களை இல்லாமற் செய்தவனும் அமைதியாய் இருப்பவனுமான ஹே குஹ ! உன்பொருட்டு நமஸ்காரம்.

गजा-वल्लीकुचालिप्तकुङ्कुमाङ्कितवक्षसे ।
नमो गजाननानन्दगरिमानान्दितात्मने ॥

*கஜாவல்லீகுசாலிப்த குங்குமாங்கிதவக்ஷஸே*
நமோ கஜானனானந்த கரிமாநந்திதாத்மனே

இந்திரனின் யானையான ஐராவதத்தால் வளர்க்கப்பட்ட தேவஸேனை (நம்பிராஜன் என்ற வேட அரசால் வளர்க்கப்பட்ட மரகதவல்லி என்ற) வள்ளியம்மை இவர்களின் ஸ்தனங்களில் பூசப்பட்ட குங்குமம் முதலிய வாஸனாதிதிரவ்யத்தால் அடையாளம் செய்யப்பட்ட மார்புடையவனும் தேவஸேனை வள்ளியம்மை இவர்களை அன்புடன் அணைத்துக் கொண்டிருப்பவரும்)

யானை முகத்தவனுடைய எல்லையற்ற ஆனந்தத்தால் உள்ளம் பூரித்தவரும் (குமரிதீர்த்தக்கரையில் வள்ளியம்மையை யானை உருவத்தில் வந்து பயமுறுத்தி தன்னுடன் சேர்த்து வைத்து ஸந்தோஷமுற்ற அண்ணனிடம் அன்புகொண்டவரும்) ஆன குஹக்கடவுளுக்கு நமஸ்காரம்.

"ब्रह्मादिदेव मुनिकिन्नर गीयमान-
गाथाविशेषसुविचित्रितकीर्तिधाम्ने
बृन्दारकामलकिरीटविभूषणस्रक्-
पुञ्जाभिरामपदपङ्कज ते नमोस्तु ॥

பிரஹ்மாதி தேவமுனிகின்னர கீயமான
காதாவிசேஷஸுவிசித்ரிதகீர்த்திதாம்னே
பிருந்தாரகாமலகிரீடவிபூஷணஸ்ரக்
புஞ்ஜாபிராமபதபங்கஜ தே நமோஸ்து

தேவர்களின் நிர்மலமான கிரீடங்களில் சூடப்பட்ட பூமாலைகளின் கூட்டங்களால் அழகுபொருந்திய தாமரை போன்ற சரணங்களையுடையவனே! பிரஹ்மதேவன் முதலிய தேவர்களாலும் மஹரிஷிகளாலும் கின்னரர்களாலும் பாடப்படுகின்ற உயர்ந்த தோத்திரரூபமான பாட்டுகளால் மிகமிக அழகுபொருந்திய புகழை இருப்பிடமாகக் கொண்டவரான உன்பொருட்டு நமஸ்காரமிருக்கட்டும், வாமதேவஸ்தோத்திரத்தின் பொருளை நன்கு ஆராய்ந்து பார்த்தாலும் நிர்குணமான குஹப்பிரஹ்மம் அடியார்களின் துன்பங்களைத் தீர்த்துவைக்க ஸகுணமான கற்பனைவடிவத்தையடைந்ததென்பது துலங்கும்.

"देवबन्दिकृता स्कन्दस्तुतिचूर्णिका"

தேவபந்திகிருதா ஸ்கந்தஸ்துதிசூர்ணிகா

(கந்தபெருமான் தான் தோன்றிய நன்னாளிலிருந்து ஏழாவது தினத்தில் தேவர் படைத்தலைவனாக அபிஷேகம்

செய்யப்பட்டு தாரகனுடன் போர் புரியப் புறப்படும் தருவாயில் வெற்றிகாண ஆவல் கொண்ட தேவபந்திகளால் செய்யப்பட்ட சூர்ணிகாபரூபமான ஸ்தோத்திரம் ஸ்கந்தமஹாபுராணத்தில் உள்ளது.

१. जय, अतुलशक्तिदीधितिपिञ्जररुचारुणमण्डलभुजो-द्भासित देवसैन्य!

ஜய அதுலசக்தி தீதிபிஞ்ஜரருசாருண
மண்டல புஜோத்பாஸித தேவஸைன்ய

இணையற்ற சூலாயுதத்தின் சிவந்த ஒளிமண்டலத்தில் விளங்குகின்ற கைகளால் பிரகாசிக்கின்ற தேவர் படையுடைய குஹனே வெற்றி பெறுக.

२. हरवदनकुमुदकानन विकासनेन्दो

ஹரவதன குமுத கானனவிகாஸனேந்தோ

பரமசிவனுடைய முகங்களாகிற ஆம்பல் காட்டை (கூட்டத்தை) மலரச் செய்வதில் சந்திரனாக இருப்பவனே ! (பரமசிவனை ஸந்தோஷிக்கச் செய்கின்றவனே)

३. कुमारनाथ जय

குமாரநாத ஜய

சிறுவனான (எங்கள்) தலைவனே வெற்றி பெறுக.

४. दितिकुलमहोदधिवडवानल!

திதிகுலமஹோததிபடவானல

திதி தேவியின் (அஸுரர்களின் தாயின்) வம்சமாகிற கடலுக்கு படவாக்னி போன்றவனே (அஸுரர்களை நாசம் செய்கின்றவனே)

५. मधुररवमयूरसर्वासुरमुकुटकूटकुट्टितचरणनखाङ्कुर!

மதுரரவ மயூரஸர்வாஸுரமுகுட கூட
குட்டிதசரண நகாங்குர

எல்லா அஸுரர்களுடையவும் கிரீடக்கூட்டங்களில் தளிர் போன்ற கால் நகங்கள் கொண்டு குத்துகின்றதும் அழகாக சப்திக்கின்றதுமான மயிலையுடையவனே !

६. महासेन

மஹாஸேன
பெரிய படையை உடையவனே !

७. तारकवंशशुष्कतृणदावानल !

தாரகவம்ச சுஷ்கதிருணதாவாநல
தாரகாஸுரனின் குலமாகிற உலர்ந்த புற்களுக்கு காட்டுத்தீ போன்றவனே !

८. योगीश्वर

யோகீச்வரா !
மனதை யடக்கிய மஹான்களுக்குத் தலைவனே !

९. योगिजनहृदयगगनविततचिन्तासन्तानसन्तमसनोदन खरकिरणकल्पनखनिकरविराजितचरणकमल !

யோகிஜனஹ்ருதய ககனவிதத சிந்தாஸந்தான ஸந்தம ஸநோதனகரகிரண கல்பனகனிகர விராஜித சரணகமல !

யோகிஜனங்களின் மனதாகிற ஆகாசத்தில் எல்லையற்ற பற்பல எண்ணங்களின் துடர்ச்சியாகிற இருளையில்லாமற் செய்கின்ற ஸூர்யனுக் கொப்பான நகங்களின் கூட்டங்களால் பிரகாசிக்கின்ற தாமரை போன்ற கால்களையுடையவனே !

१०. स्कन्द जय

ஸ்கந்த ஜய
கந்த பெருமானே வெற்றி பெறுவாயாகுக.

११. बाल ! सप्तवासर ! भुवनावलिशोकसन्दहन !

பால ! ஸப்தவாஸர ! புவனாவளி சோக ஸந்தஹன !

ஏழு நாட்களே சென்ற சிறு குழந்தையே எல்லா உலகங்களிலுள்ளவர்களுடைய துயரத்தைக் பொசுக்குகின்றவனே ! (வெற்றி பெறுவாயாக)

இச்சிறு ஸ்தோத்திரத்திலும், யோகிகளால் தியானம் செய்யப்பட்டவன், தான் தோன்றி ஏழாவது தினத்தில் தாரகனை வதை செய்தவன் கந்தபெருமான் என்று கூறப்படுவது மிகவும் குறிப்பிடக்கதக்கது.

कुमारसम्भवश्चैव धन्यः पुण्यस्तथैव च

भक्तश्च यः कार्तिकेये काकुत्स्थ भुवि मानवः

आयुष्मान्पुत्रपौत्रैश्च स्कन्दसालोक्यतां व्रजेत् ।

குமாரஸம்பவச்சைவ தன்ய :புண்யஸ்ததைவ ச

பக்தச்ச ய : கார்த்திக்கேயே காகுஸ்த புவிமானவ :

ஆயுஷ்மான் புத்ர பௌத்ரைச்ச ஸ்கந்தஸா

லோக்யதாம் வ்ரஜேத்

குஹப்பெருமானின் அவதாரகதையானது செல்வத்தை தருகின்றது, பாவத்தைத் துலைக்கின்றது.இவ்வுலகின் கண் எந்த மனிதன் கார்த்திக்கேயனெனும் குஹப்பெருமானிடத்தில் பக்தி செய்கின்றானோ அவன் நீடுழி காலம் வாழ்ந்து மக்கள்ப்பேறு பெற்று (முடிவில்) கந்தபெருமானிருப்பிடம் செல்கின்றான் - என்று ராமாயணம் பாலகாண்டத்தில் வால்மீகி முனிவர் கந்தபெருமானின் பக்திக்கு பயனைக் கூறுகிறார்.

नामान्येतानि दिव्यानि कार्तिकेयस्य यः पठेत् ।

स्वर्गं कीर्तिं धनं चैव स लभेन्नात्र संशयः ॥

स्कन्दस्य य इदं विप्रः पठेज्जन्म समाहितः ।

श्रावयेद् ब्राह्मणेभ्यो यः शृणुयाद्वा द्विजेरितं ॥

धनमायुर्यशो दीप्तं पुत्रान् शत्रुजयं तथा ।
स पुष्टितुष्टी सम्प्राप्य स्कन्द सालोक्यतामियात् ॥

நாமான்யேதானி திவ்யானி கார்த்திக்கேயஸ்ய ய : படேத்
ஸ்வர்கம் கீர்த்திம் தனம் சைவ ஸ லபேந்நாத்ர ஸம்சய :
ஸ்கந்தஸ்ய ய இதம் விப்ர : படேஜ் ஜன்ம ஸமாஹித :
ச்ராவயேத் ப்ராம்ஹணேப்யோ ய :
ச்ருணுயாத்வா த்விஜேரிதம்
தனமாயுர் யசோ தீப்தம் புத்ரான் சத்ருஜயம் ததா
ஸ புஷ்டிதுஷ்டீ ஸம்ப்ராப்ய ஸ்கந்தஸாலோக்யதாமியாத்

எவனொருவன் கார்த்திக்கேயனின் திவ்யமான திருநாமங்களை படிக்கின்றானோ அவன் புகழ், செல்வம், ஸ்வர்கம் இவைகளை அடைகின்றான், இதில் ஐயமில்லை.

கந்தபெருமானின் அவதாரகதையை எந்த அந்தணன் அமைதியுடன் படிக்கின்றனோ அந்தணர்களிடம் கூறுகின்றானோ அல்லது ஆதரவுடன் பெரியவர் கூறும் பெருமாளின் அவதார கதையைக் கேட்கின்றனோ அவன் நீடுழி காலம் வாழ்வையும் அழியாப் புகழையும், மக்களையும், பகைவர்களிடமிருந்து வெற்றியையம், உடல்வனப்பையும் உள்ளத்தின் பூரிப்பையும் அடைந்து கந்தபெருமானிருப்பிடம் சேருகின்றான்.

இங்ஙனம் கீழே காட்டிய ச்ருதி ஸ்மிருதி இதிஹாஸம் புராணம், பெரியோர்வாக் ஆகிய பிரமாண வசனங்களால் நிர்குணமான குஹக்கடவுளின் வடிவத்தை அடைவதற்கென்றே ஸகுணவடிவம் கூறப்பட்டது என்று அறிக, இனி ஸகுணமான குஹக்கடவுளின் பிரபாவத்தை விளக்குவோமாக.

# ஸகுணகுஹப்பிரஹ்ம பிரபாவம்

(ஸ்காந்தோப புராணம் சங்கரஸம்ஹிதையைத் தழுவி எழுதியது)

## I. சூரபத்மாதிகளின் தோற்றம்

முன்னொரு காலத்தில் கச்யப ரிஷியானவர் தருமநெறி தவறாது தவமியற்றுங்கால், மாயை என்னும் ஒரு அஸுர மங்கை கச்யபரின் முன் தோன்றினாள். கச்யபர் அவளைக்கண்டு மதிமயங்கி தான் இயற்றும் மாதவத்தை அறவே விட்டு அவளையணையச், சூரபத்மன், சிங்கமுகன், தாரகன், அஜாமுகியென்பவர்களும் இரண்டு லக்ஷம் ஸேனைகளும் தோன்றினர். சூரபத்மன் முதலிய அஸுரர்கள் உதித்ததுமே தேவர்களை வருத்த ஆரம்பித்தனர்.

கச்யப மகரிஷி, தன் மைந்தர்களான சூரபத்மாதிகளை நல்வழிப்படுத்த எண்ணங்கொண்டு தர்மங்களை அனுஷ்டிக்க உபதேசித்தார். தந்தையின் நல்வார்த்தைகளை பொருட்படுத்தாமல் சூரபத்மன் தன் ஸஹோதரர்களுடன் வடத்பீவம் சென்று பரமசிவனைக் குறித்து கடும்தவம் புரிந்தான். தினந்தோறும் 1108 தாமரை மலர்களால் சிவனை பூஜித்தான், சிவனைக் காணாமல் தன்னையே அறுத்து நெருப்பில் ஹோமம் செய்தான்.

கருணைக்கடலான சிவனும், சூரனை கங்காஜலத்தை தெளித்து உயிர்ப்பித்து ஒரே நாளில் உலகத்தை சுற்றிவரும் வேகம் வாய்ந்த "இந்திரலோகம்" என்றும் தேரையும், தன்னுடைய சக்திகளனைத்தையும், பாசுபதம் என்னும் திவ்ய அஸ்த்திரத்தையும், 1108 யுகங்கள் 1108 பிரம்மாண்டங்களுக்கு தலைமையும் அருளினார். இங்ஙனம் வரம்பெற்ற சூரன் தலைமையில் அஸுரர்கள் செய்யும் கொடுமையால் தேவர்கள் தேவலோகத்தை விட்டோடித் தலைமறைந்தனர். சிலர் அஸுரர்களால் சிறைப்பட்டனர். சூரபத்மனின் மைந்தன் பானுகோபன், இந்தரகுமாரனான ஜயந்தனை சிறைப்படுத்தினான்.

தேவராஜனும் தன் மனைவி சசீதேவியை அஸுரர்களிடமிருந்து காப்பாற்ற *ஹரிஹரபுத்திரஸ்வாமியிடம் ஒப்படைத்து சிர்காழி என்னும் சிவஸ்லத்தில் தன் துன்பம் நீங்குவதற்குப் பரமேச்வரனைக் குறித்துத் தவமியற்றினான்.

*சசீதேவியைக் காத்த ஹரிஹரபுத்திரர், மூக்கில் விரல் வைத்த அய்யனார் என்ற திருநாமத்துடன் சீர்காழிக்கு ஸமீபத்தில் ஓராலயத்தில் எழுந்தருளியிருக்கின்றார். இதற்கு ஒரு இதிகாஸம் கூறுவது வழக்கம். வைஷ்ணவ சைவ பண்டிதர்களுடன் சோளவேந்தன் ஒருவர் அய்யனாரை தரிசித்து மூக்கில் விரல் வைத்திருப்பதற்கான காரணத்தைக் கூறும்படி பண்டிதர்களைக் கேட்கலானார். அதந்கு வைஷ்ணவ பண்டிதர்கள் "சிவனைத் தந்தையென்றும், விஷ்ணுவை அன்னையென்றும் அழைப்பேன். பார்வதியை என்னவென்று அழைப்பேன் என்று ஆலோசிப்பதின் குறிப்பு" என்று பதிலளித்தனர். சைவர்கள் "சிவன் தந்தை விஷ்ணு தாய், அதுபோலவே சிவன் மனைவி பார்வதியும் தாயாவாள். இந்த லெஷ்மிதேவியை எங்ஙனமழைக்க வேண்டுமென்று ஆலோசிப்பதன் குறிப்பு" என்று கூறினர். உண்மையில் - சசீதேவியின் அருகாமையில் ஒருவரும் வராதிருக்க பயமுறுத்தும் குறிப்பு என்று கொள்ள வேண்டும்.

## 2. பார்வதி கல்யாணம்

அப்போது தாக்ஷாயணி யென்னுமுமையம்மை சிவதுவேஷத்தால் வெறுக்கத் தகுந்த தன் தந்தை தக்ஷனை வெறுத்து யோகாக்னியால் பௌதிக தேஹத்தை நீராக்கி பக்தனான இமயோனுக்கு புத்திரியாய்ப் பிறந்து பரமசிவனை யடைவதற்குத் தவம் செய்தனள். பரமசிவனும் தக்ஷிணாமூர்த்தி வடிவங்கொண்டு யோகத்திலமர்ந்து ஸனகாதி நால்வருக்கு ஞானோபதேசம் செய்து கொண்டிருந்தார். சிவம் யோகத்திலும் சக்தி தவத்திலும் இருக்குங் காரணத்தால் உலகமெல்லாம் பிரவிருத்தியற்று நிச்சலமாய் இருந்தது. இந்திரனும் அஸுரர்கள் செய்யும் கொடுமைக்கு ஆற்றாது மனந்தளர்ந்து சிவசக்திகளை

ஒன்றுசேர்க்கும் நிமித்தம் பலவாறு யோசித்துக் கடைசியில் மன்மதனை வேண்டிக் கொண்டனன். மன்மதனும் இந்திரனது வேண்டுகோளுக்கு ஒருவாறு இணங்கி யோகாஸனத்திலமர்ந்துள்ள பரமசிவன் மீது புஷ்பபாணங்களைப் பிரயோகித்தனன். உடனே பரமசிவன் நெற்றிக் கண்ணைத் திறந்து பார்த்தனர்.

மன்மதன் எரிந்து சாம்பலானான். பின் மகேசன் மன்மதனது மனைவி ரதிதேவியின் முறையீட்டுக்கு மனங்கரைந்து காமனுக்கு அருவ வடிவத்தை யருளிப் பார்வதியின் தவத்திற்குக்களிப்புற்று அவள்முன் தோன்றி மணஞ் செய்துகொண்டு கைலாஸ பர்வதத்தில் அமர்ந்து விளங்கினான்.

## 3. குஹாவதாரம்

சிவசக்திகளை ஓராஸனத்திற் கண்டு ஸகல தேவர்களும் முன் ஈசன் உரைத்தபடி அஸுரர்களை யழிக்க வல்ல ஒரு சேயை தந்தருளும்படி வேண்டித்துதித்து வணங்கினார்கள். தேவர்களின் வருத்தத்தை யொழிக்கும் பொருட்டு சக்தி ஸமேதனான பரமசிவன், தனது முகங்கள் ஐந்தினோடு சக்தி முகம் ஒன்றும் சேர ஆறுமுகத்தோடும் சக்திகளைப் பார்த்தனர்.

அப்புண்யமான மங்கள க்ஷணத்தில் பரமசிவனது நெற்றிக்கண்கள் ஆறிலிருந்தும் கோடிஸூர்யப் பிரகாசமுடைய மஹா தேஜஸ்ஸானது வெளிப்பட்டது.

அங்ஙனம் வெளிப்பட்ட ஆறுபொறிகளும் பதினான்கு லோகங்களிலும் வியாபித்தன. யாவரும் பரபரப்பை அடைந்தனர், பிரமித்தனர், பின் பரமன் அப்பொறிகளை வாயுதேவனிடத்தில் தந்தனர். வாயுவும் அவற்றைத் தாங்க மாட்டாமல் அக்னிபகவானிடம் கொடுத்தனர். அக்னியும் அவற்றையேற்க முடியாமல் கங்காதேவியினிடம் சேர்ப்பித்தனன், அக்கங்கையும் அவற்றைத் தரிக்க மாட்டாது சரவணமென்னும் நாணல் தழையில் ஒதுக்கினாள்.

சரவணத்திற் சேர்த்த ஆறு பொறிகளும் ஆறு குழந்தைகளாக விளங்கின. இங்ஙனம் விளங்கும் குழந்தைகள் கிருத்திகை நக்ஷத்திர தேவதைகளனின் ஸ்தன்யபானம் செய்து விளையாடிக் கொண்டிருந்தன.

## 4. நவவீரர்கள் தோற்றம்

இவ்விஷயமிங்கனமிருக்கப் பரமசிவனது நெற்றிக்கண்களிலிருந்து சிவதேஜஸ்ஸாகும் பொறிகள் கிளம்பியபோது பார்வதி பயந்து பரமேச்வரனது மடியை விட்டு ஓடுகையில் இடறிய பாதங்களிற் பூண்ட பாதச்சிலம்பிலிருந்து நவரத்தினங்கள் உதிர்ந்தன. இந் நவரத்தினங்களில் பரதேவதையின் திருமேனி பிரதிபலித்தது.

அப்பிரதிபிம்பங்கள் ஒன்பது பெண்களாய் விளங்கின. அப்பெண்மணிகளைப் பரமசிவன் அழைத்தனர். அவர்கள் பரமசிவனைக் காதல்மனத்தோடு நோக்கினார்கள்; உடனே அவர்கள் கருவுற்றவராயினர். தேவியின் சாபத்தால் பிரஸவிக்க முடியாமல் அவர்களின் மேனி தளர்ந்து மிகுந்த வியர்வையுண்டாக, அவ்வியர்வைத்திவலைகளினின்றும் இலக்ஷம் படைவீரர்களுண்டாயினர். பின்ஜகன்மாதாவுக்கு அப்பெண்மணிகளிடம் கருணையுண்டாகி “லோகக்ஷேமத்தின் பொருட்டு உங்கள், கர்ப்பங்களினின்றும் ஒன்பது மைந்தர்கள் அவதரிக்கக்கடவர்” என்று அவர்களை அனுக்ரஹித்தனள். பரதேவதையின் கட்டளைப்படியே நவரத்தினப் பெண்களின் வயிற்றினின்றும் வீரபாகு முதலிய நவவீரர்கள் தோன்றினர்.

1) மாணிக்கவல்லி வீரபாகுவையும், 2) தரளவல்லி வீரகேஸரியையும், 3) புஷ்யவல்லி வீரமஹேந்திரனையும், 4) கோமேதகவல்லி வீரமஹேச்வரனையும், 5) வைடூர்யவல்லி வீரபுரந்தரனையும், 6) வஜ்ரவல்லி வீரராக்ஷஸனையும், 7) மரகதவல்லி வீரமார்த்தாண்டனையும், 8) வித்ருமவல்லி வீராந்தகனையும், 9) நீலவல்லி வீரதீரனையும் பிரஸவித்தனர்.

இங்ஙனம் நவவீரர்களும் இலக்ஷம் ஸேனைகளும் ஆறுமுகனுக்குத் துணையாய் விளங்கினார்கள்.

முற்றறிவுடைய பரமன், உமாதேவியோடு சரவணப்பொய்கைக்குச் சென்று அங்கே விளையாடிக்கொண்டிருக்கும் ஆறு குழந்தைகளையும் உமையம்மைக்குக் காட்டி "உமையே நின்மதலைகளைப் பார்" என்று திருவாய் மலர்ந்தனன். உடனே உமையும் மிகக்களிப்போடு தனது திருக்கரங்களினால் அக்குழந்தைகளைச் சேர்த்து அணைத்தனள்.

அணைத்ததும் அந்த ஆறு குழந்தைகளும், திருமுகங்களாறும் திருக்கரமீராறும் சுருதி புகழ்தாளிரண்டும் தோன்ற ஒரு வடிவாய் நின்றன. இங்ஙனம் நின்ற அவ்வாறுமுகக் குழவிக்கு உமாதேவி தன் திரு முலைப் பாலூட்ட, அதுவுமுண்டது, குஹப்பெருமானின் முகமலரிலிருந்து சரவணப் பொய்கையில் சிந்திய திருமுலைப்பால்த் திவிலைகளை உண்டவர்களான பராசரமுனிவரின் புதல்வர்களான மத்யஸங்கள் முக்தி பெற்றனர். பரமனும் அக்குழந்தையைத் தன் மார்போடணைத்து உச்சிமோந்து திருக்கயலாயத்திற்கு அழைத்துச் சென்றனன்.

## 5. குஹக்கடவுளின் பால லீலைகள்

குஹன் தனது துணைவர்களான நவவீரர்களோடும் லட்சம் ஸேனையோடும் கூடி விளையாட ஆரம்பித்தனன். தன் தாளினால் ஏழு கடல்களையும் உடைத்து ஒன்றாக்கினான். ஏழு குலாசலங்களும் தங்கள் இடங்களை விட்டுத் தகர்க்கப்பட்டன. தீக்கஜங்கள் யாவும் வீறிட்டோடும் சிறு பந்தெனும்படி விண்ணில் எறியப்பட்டன. இங்ஙனம் பல திருவிளையாடல்கள் நடத்தப்பட்டன. இங்ஙனம் பாலக்குஹன் திருவிளையாடல் புரிவதைக் கண்டு இந்திரன் முதலிய தேவர்கள் மதிமயங்கி இவன் அஸுரக் குழவியோவென ஐயமுற்று அக்குழவியோடு போர் புரிந்து உயிர் நீத்தனர். தேவர்கள் யாவரும் மாண்ட செய்தியை நாரதரால் அறிந்த தேவகுரு குஹன் திருவடிகளில் வீழ்ந்து

துதித்து தேவர்களைப் பிழைப்பிக்க வேண்டினர். குஹனும் உண்மை யறியாது மயங்கி உயிர் நீத்த அத்தேவர்களையெழுப்பி அவர்களுக்குத் தனது விச்வரூபத்தைக் காட்டியருளினான்.

## 6. அஜநிக்ரஹம்

இச்சமயத்தில் நாரதர் சிவபெருமானைக் குறித்து ஒரு யாகமியற்றினார். அந்த யாகமானது ஏதோ ஒரு வகையில் விதி தவறி நடத்தப்பட்ட காரணத்தால் அதனின்றும் ஒரு பெரிய ஆட்டுக்கடா தோன்றிற்று, அக்கடாவானது எல்லாப் புவனங்களும் நடுங்கும்படி கெர்ச்சித்துக்கொண்டு கிளம்பிற்று, அப்பொழுது ஸகல தேவர்களும் முனிவர்களும் முருகன் சன்னிதியில் நின்று பணிந்து "சுவாமி இக்கடாவை யடக்கியருளல் வேண்டும்" என்று விண்ணப்பித்தனர்.

முருகனும் வீரபாஹுவால் அக்கடாவை யடக்கி அதைத் தனது வாகனமாக்கிக் கொண்டு யாழ் முனிவன் யாகத்தைப் பூர்த்தி செய்தனன்.

## 7. அயனைச்சிறையிடல்

இங்ஙனமிருக்க ஒரு நாள் மாலை, பிரமதேவன் சிவபெருமானைத் தரிசிக்க திருக்கைலாஸத்திற்கு வந்தான். வந்தவன் நம் குஹனை வணங்காது மிக்க உதாசீனமாய் குஹனது இருக்கையை கடந்து போயினன். அங்ஙனம் சென்ற பிரமனைக் குஹக்கடவுள் அழைத்து "வேதமுதலாகும் பிரணவப் பொருளை நீ அறிவையோ !" என்று வினவினன்.

அதற்கு அப்பிரமன் அகங்காரத்தால் "நானே அப்பிரணவப்பொருள்" என்று கூறினன். இங்ஙனம் கூறவே குஹன் சினங்கொண்டு அவனது நான்கு சிரங்களும் குலுங்கக் குட்டி அயனைச் சிறையிட்டனன். அன்றியும் அவன் புரியும் சிருஷ்டித் தொழிலைத் தானேயியற்ற ஆரம்பித்தனன்.

இங்ஙனம் சில நாள் கழிய சிவபெருமானே குஹனிடம் வந்து பிரமனைச் சிறை விடுக்க வேண்டினர்.

"பிரணவப்பொருளை அறியாத அயனைச் சிறையினின்றும் விடுதல் தகுதியோ?" என்று ஆறுமுகன் கூற சிவன் "ஆயின் அப்பொருளை நீயறிவாயோ? அறிவாயின் எனக்குக்கூறுதி" என்று மொழிந்தனன்.

குஹப்பெருமானும் சிவபெருமானுக்குப் பிரணவத்தின் உண்மைப் பொருளையுபதேசக் கிரமத்தாலெடுத் துரைத்துப் பரமசிவன் விருப்பத்தின்படி அப்பிரமனைச் சிறையிலிட்டான்.

இங்ஙனமிருக்க ஒருநாள் ஸகல தேவர்களும் திருக்கைலாஸத்தையணுகி அஸுரர்களால் தாங்கள் படும் துன்பந் தவிர்க்குமாறு மன்றாடி வேண்டிக்கொண்டனர். அவ்வேண்டுகோளுக்கிரங்கி பரமசிவன் " குமரனே, நீ சென்று அசுரர்களை வென்று தேவர்க்குற்ற விடுக்கண்களைத் தவிர்த்தருள்வாயாக" என்று ஞானசக்தியோடு மற்றும் பதினோராயுதங்களையும் கொடுத்து அனுப்பினார். குஹேசனும் அங்ஙனமே தனது வீரர்களோடும், சேனைகளோடும் புறப்பட்டு இம்மண்ணுலகத்திற்கு வந்தனர்.

## 8. தாரகாஸுர ஸம்ஹாரம்

இப்பூவுலகின் கண் ஏமகூட மலையின் சாரலில் அமைக்கப்பட்ட ஒரு மாயாபுரியின்கண் யானைமுகத்தையுடைய தாரகன் என்னும் ஓரசுரன் கொடுங்கோல் புரிந்து வந்தனன். இவன் மாயையின் மூன்றாவது மைந்தன். சூரனது தம்பி. இவன் விஷ்ணு சக்ரமான ஸுதர்சனத்தை ஓராபரணம் போலத் தன் கழுத்திலணிந்தவன். பிரஹ்மாஸ்திரத்தையொரு பழம்போல் விழுங்கியவன். குஹன் இத்தகைய வலிமை பொருந்திய தாரகனைப் பல அஸ்திரங்களால் அடித்தான்.

அப்போது கிரௌஞ்சன் என்னும் மாயாவியான ஓர் அஸுரன் திருப்புரங்களாய் நிற்க அக்கோட்டைகளில் தாரகன் மறைந்து நின்று போர் புரிந்தான். சக்திதரனது புன்முறுவலால் திரிபுரங்கள் எரிந்துபடத் தாரகன் கிரௌஞ்சன் என்னும் இரண்டு அஸுரர்களையும் குஹன் தனது வேலாயுதத்தால் முறையே கொன்றும் தூளாக்கியும் வெற்றி மாலையைச் சூடினர்.

## 9. திருச்செந்தூர் வருகை

கிரௌஞ்சனும் தாரகனும் ஒழியவே இந்திரன் முதலிய தேவர்களும் ரிஷிகணங்களும் குஹக்கடவுளைத் தேவகிரியில் அமர்த்தி முறைப்படி பூஜித்து துதித்து நின்றனர். தேவரிஷி கணங்களின் பூஜையைக் களிப்புடன் அங்கீகரித்து கந்தபிரான் அவ்விடத்தினின்றும் புறப்பட்டுத் தென்திசையாய்ச் சென்று கேதாரம், காசி முதலிய பல சிவஸ்தலங்களைத் தரிசித்துக் கொண்டு குமாரபுரமென்னும் திருச்சேய்நல்லூரை யடைந்து அங்கே சில்காலம் தங்கிப் பரமசிவனைப் பூஜித்து சங்கராஸ்த்ரம் ரௌத்ராஸ்த்ரம் முதலிய பல திவ்ய அஸ்த்ரங்களைப் பெற்று ஒரு பெரிய பாலைவனத்தையுங் கடந்து, திருச்செந்தூரென்னும் ஜயந்திபுரத்தை யடைந்தனர்.

அடைந்ததும் குஹன் தேவகுருவாகிய பிருஹஸ்பதியின் மூலமாய் அஸுரர்களின் பிறப்பு, தவம், வீரயாகம், வரப்பேறு, சுக்கிரன் உபதேசம், திக்விஜயம், தேவரையேவல் கொளல், அமரரைச் சிறையிடல் முதலிய விருத்தாந்தங்களைச் செவிமடுத்து "அச்சூரனாதி அசுரரைக் கொன்று தேவர்களைச் சிறையினின்றும் மீட்பேன்" என்று திருவாய்மலர்ந்தருளினான்.

## 10. வீரபாஹுவின் தூது

அஸுரரைக் கொன்று அமரரைச் சிறை மீட்பேன்" என்னும் பிரதிக்ஞையையேற்ற குமரேசன் வீரபாகுவைச் சூரபத்மனிடம் தூதாக அனுப்பினான். வீரபாகுவும் கடலைத்

தாவிப்பாய்ந்து இலங்கையை யடைந்து வீரசிங்கன், யாளிமுகன் முதலிய அசுரர்களைக் கொன்று வீரமாகேந்தரபுரியை யடைந்து அங்கே சிறைப்பட்டு வருந்தி நிற்கும் தேவேந்திரன் மகன் ஜயந்தனைத்தேற்றிச் சூரபத்மனது கொலுமண்டபத்தை யடைந்தனன்.

வீரபாகுவைச் சூரன் பார்த்து "அடா ! நீ யார்? உன் வரலாற்றைக் கூறுவாயாக" என்று மொழிந்தனன். அதற்கு வீரபாகு தேவர் "அடா சூரபத்மனே நான் முழுமுதற் கடவுளாம் ஆறுமுகச்சிவனாரால் அனுப்பப்பட்ட தூதன். அவன் சிவகுமரனாய் அவதரித்துள்ளான். நீ யிக்கணமே குற்றமற்ற தேவர்களது சிறையை நீக்கி விடுவாயாக, அங்ஙனம் செய்யாவிடின் மாயாவியான கிரௌஞ்சன், மஹாவல்லமையுள்ள தாரகன் இவர்கள் அடைந்த கதியை நீயும் அடைய நேரும், இவ்விஷயத்தை உனக்கு அறிவுறுத்தும் பொருட்டே பேரருளாளனாகிய என் பெருமான் என்னை உன்பால் அனுப்பியுள்ளான்" என்று புகன்றான்.

இதைக்கேட்டுச் சூரன் சினங்கொண்டு ஆர்ப்பாட்டம் செய்து தூதாக வந்த வீரபாஹுவைக் கொல்ல ஓராயிரம் வீரப்படைகளுடன் சதமுகனையனுப்பினான்.

வீரபாகு அவர்களைக் கொன்று பிறகு வந்த ஆயிரம் கைகளும் ஐந்நூறு தலைகளும் கொண்ட பல வீரர்களையும் யாளி முகனையும், சூரபத்மனது மக்களில் ஒருவனாகிய வஜ்ரபாகுவையுங்கொன்று வீரமகேந்திரபுரத்தை விட்டகன்று குஹப்பெருமானிடம் வந்து சூரனது எண்ணத்தைத் தெரிவித்தனன்.

## 11. குஹப்பெருமான் போருக்குப் புறப்படுதல்

உடனே குஹப்பெருமான் "அஸுரகுலத்தை அடியோடு ஒழிக்கின்றேன்" என்னும் பிரதிக்ஞயோடு திருச்செந்தூர் விட்டு புறப்பட்டு பாசறையை வந்தடைந்தனன். நவவீரர்களும்

இலக்ஷம் குமாரகணங்களும், சிவ, ருத்ர, பூத, பிரமதாதிகணங்களும் வெகு உற்சாகத்தோடு வந்து சேர்ந்தன.

சூரபத்மனும் தனது பல்லாயிரக்கணக்கான ஸேனைகளைத் திரட்டித் தன் மூத்தமகன் பானுகோபனைப் போர்க்களத்திற்கு அனுப்பினான். நம் சரவணபவனும் தன்னிளையோனாகிய வீரபாகுவை யனுப்ப வீரபாகு தேவரும், பானுகோபனும் போர் புரிந்தனர். கடைசியில் பானுகோபனது மோஹனாஸ்திரத்தால் எல்லாபடைவீரர்களோடு வீரபாகுவும் மயங்கித் தறையில் கிடப்பவராயினார்.

இச்செய்தியையறிந்த ஸர்வஞ்ஞனான குஹன் மோஹனாஸ்திரத்திற்கு விரோதியாகிய அமோஹாஸ்திரத்தை யேவி வீரபாகு முதலிய வீரர்களுக்கும் ஸகலபூதப்படைகளுக்கும் ஏற்பட்டிருந்த மோஹத்தை தெளிவித்தனன். உடனே வீரபாகு தேவர் பானுகோபன் மீது பாசுபதாஸ்திரத்தைப் பிரயோகிக்கக் கையிலெடுத்தார். இதைக் கண்ணுற்ற பானுகோபன் மிகுந்த அச்சங்கொண்டவனாய் அப்பாசுபதாஸ்திரத்திறகுப் பதில் அஸ்திரம் தன்னிடத்திலில்லையே யென்று கலங்கிப் போர்க்களத்தை விட்டகன்று தன் நகரத்திற்குத் திரும்பினான்.

## 12. சூரனுடைய கிரீடம் உடைதல்

தன் மகன் பானுகோபன் யுத்தகளத்திலிருந்து மிக்க அவமானத்தோடு வீட்டுக்குத் திரும்பி வந்து விட்டானென்று அறிந்த சூரன் காலாக்னிருத்திரன் போல் சீறிப் போர்க்களத்திற்கு வந்தான். இங்ஙனம் வந்த முருகன் வெகுநேரம் பலவகையாய் போர் புரிந்து சூரனுடைய கிரீடத்தையுடைத்து அவனைக்கீழே தள்ளி மானபங்கம் செய்தனன். பின்னர், மறுபடியும் பானுகோபன் யுத்தத்திற்கு வந்து வீரபாகுவோடு பெரும்போர் செய்தனன். மாயாஸ்திரத்தினால் பூதர்களையும், வீரர்களையும் மயக்கிச் சுத்தநீர்க்கடலில் அமிழுத்தி வீடு திரும்பினான்.

## 13. பானுகோப வதம்

இச்செய்தியைக் குஹன் நாரதரால் அறிந்து வேலாயுத்தை விடுக்க, அவ்வேல் யாவரையும் அழைத்து குஹன் திருமுன் கொண்டு வந்து சேர்த்தது, பின் சூரன் மகன் ஹிரண்யன், அக்கினிமுகன், மந்திரிகளில் ஒருவனான தருமகோபன், மூவ்வாயிரவர் முதலியவர் புடை சூழப் பானுகோபன் மறுபடியும் யுத்தத்திற்கு வந்தான்.

வேலாயுதத்தினால் மாயை நீங்கினவர்களாய்ப் பூதர்களும் வீரர்களும் சூரபத்மனது நகரைத் தீக்கிரையாக்கி ஹிரண்யனைப் பலவாறு வருத்த, அவன் பிழைத்தாற்போதும் என்று கடலில் ஒளிந்து கொண்டனன், அக்கினிமுகன். தருமகோபன், மூவாயிரவர் முதலியவர்கள் வீரபாகுவாலும் விஜயனென்பவனாலும் கொல்லப்பட்டனர். பிறகு வீரபாகு தேவர் பானுகோபனைச் சங்கரித்தனர். தேவர்கள் யாவரும் மகிழ்ந்தனர். வீரபாகுவும் பாசறை யடைந்து குஹனை வணங்கி நின்றனன்.

## 14. சிங்கமுகவதம்

பின், மறுநாள் உத்தர சமுத்திரத்திலுள்ள ஆஸுரமென்னும் நகரத்தை யிருப்பாகவுடைய ஆயிரந்தலைகளுடைய சிங்கமுகன், தன் தமையனாகிய சூரன் முன் தோன்றி "அண்ணா ! இப்போது நம்மோடு போர் புரிபவன் சிவபெருமானே யாவன்; அவனை வெல்லுதல் முடியாத காரியம். நாம் தோல்வியுறுதல் நிச்சயம், ஆயினும் நான் சண்டைக்குச் செல்கின்றேன்" என்று கூறிச் செறுக்களம் சேர்ந்தனன். பூதசேனைகளும் இலக்கத்தொன்பது வீரர்களும் போர்க்களமேவினர். சிங்கமுகன் மாயாபாசத்தை யேவினான். அது நவவீரர்களையும் பூதசேனைகளுள் ஓராயிர வெள்ளத்தையும் பிணைத்துக்கொண்டு ஏழுகடலுக்கப்பால் விளங்கும் உதயகிரியில் தள்ளிற்று ; எஞ்சியுள்ள பூதகணங்களைத் தன் ஆயிரம் வாய்களினாற்கவ்வி விழுங்கினான்.

இதையிறைவன் அறிந்து புன் முறுவல் செய்து ஒர வஜ்ராயுதத்தை யேவினான். அது சிங்கமுகன் மார்பைத் துளைக்க. அவ்வழியாய்ப் பூதரனைவரும் வெளிவந்து வடிவேலிறையைத் துதித்து நின்றனர். பெருமான் விடுத்த மற்றொரு பாணத்தால் மாயா பாசத்தால் கட்டுண்டு கிடந்த வீரர்கள் யாவரும் விடுபட்டு பெருமானை யடைந்து வணங்கினார்கள். பின் சிங்கமுகன் பற்களைக்கடித்து அட்டகாஸம் செய்தனன். வடிவேல் பெருமான் பல அஸ்திரங்களை விடுத்து அவனது ஆயிரம் முடிகளையும், இரண்டாயிரம் கைகளையும் அறுத்தனன். அவையுடனே முளைத்தன. இங்ஙனம் பன் முறையறுத்தும் அவை முளைப்பதைக் கண்டு ஒரு ஹுங்காரம் செய்து அதட்டிய மாத்திரத்தில் அவை வளராமல் நின்று விட்டன. அக்கொடியோனாகிய சிங்கமுகன் இரண்டு கைகளோடும் ஒரு தலையோடும் நின்று ஒரு கதையைப் பெருமான் மேல் விட்டெறிந்தான். வேலன் ஒரு வஜ்ராயுதத்தையெறிந்தான். அது அசுரன் எறிந்த கதையைத் தூள் தூளாக்கிச் சிங்கமுகனுடைய் உயிரைக் கவ்விக்கொண்டு சென்று கங்கையிற் படிந்து திரும்பி வந்து இறைவன் திருக்கரத்தில் அமர்ந்தது, கந்தருவர் மலர் மாரி பொழிந்தனர். திருமாலும் பிரமனும் இந்திரன் முதலிய தேவர்களும் குஹனைப் பலவகையாய்த் துதித்தனர்.

## 15. குஹன் சூரனுக்கு விச்வரூபம் காண்பித்தல்

மறுநாள் அதாவது ஆறாவது நாளில் சூரபத்மன், தன் தம்பி சிங்கமுகன் இறந்த செய்தியைச் செவியுற்றுக் கண்களில் நீர் பெருக்கியழுதனன். உடனே ஆலகால விஷம் போல் சீறியெழுந்து ஆயிரத்தி நூற்றெட்டண்டங்களிலுமுள்ள சேனைகளை திரட்டிக்கொண்டு போர்க்களம் புகுந்தனன்.

குஹப்பெருமானும் இன்று சூரனை யொழிப்போமென்னும் சந்தோஷத்தால் பூதகணங்களும், குமாரகணங்களும் நாற்புறமும் சூழ்ந்து நிற்க யுத்தபூமியை யடைந்தனன். அடைந்ததும், ஆயிரத்தி நூற்றெட்டண்டங்களின் பல்லாயிர வள்ள அவுணர் ஸேனைகளையுங் குஹன் கண்ணால் நோக்கி யொரு ஹுங்காரம் செய்து நீறாக்கினான்.

சூரன் பெருமான் மீது சக்ராயுதத்தைப் பிரயோகித்தான். அது இறைவன் தாளில் வந்து சரணமடைந்தது. இதைக்கண்டு பெருஞ்சினங் கொண்ட சூரன் ஆகாயத்திற்க்கிள்ம்பி பல அண்டங்களில் மறைந்து நின்று பல அஸ்திரங்களை விடுத்தான். அவை யாவும் சூரியன் முன்னுற்ற பனித்திரள் போல் ஒழிந்தன.

இதையறிந்த சூரன் மனங்கலங்கிப் போர்க்களத்தை விட்டுப் புறங்காட்டியோடி வீரமாகேந்திரபுரத்தை யடைந்து ஒளிந்து கொண்டான். அவனைத் துரத்திக் கொண்டு வேலன் அங்கும் சென்று அங்குள்ள ஸேனைகளையும் தன் முறுவலினால் சாம்பலாக்கிச் சூரனை யெதிர்த்தனன். சூரன் மிகவும் மனங்கலங்கித் தன் தாயாகிய மாயையை நினைத்தான். உடனே மாயை அவன் முன் தோன்றி இறந்த சேனையை மறுபடியும் உயிர்த்தெழுமாறு செய்தனள்.

இதைக்கண்ட தேவர்கள் யாவரும் மனங்கலங்கி வேலாயுதப் பெருமானிடம் விண்ணப்பித்தனர். வடிவேலனும் உடனே ஓர் ஒப்பற்ற பாசுபதாஸ்திரத்தைப் பிரயோகித்து, உயிர்த்தெழுந்த அசுரப்படைகளை யெல்லாம் வீழ்த்தி மிருதஸஞ்சீவி மலையையும் தூளாக்கினான். பிறகு சூரன் பல மாயவுருவங்களைத் தாங்கிப் போர் புரிந்தனன்.

சக்கிரவாகப் பறவை வடிவங்கொண்டு போர் புரியும் சூரனைப் பரமன் கண்டு தன்னெதிரே நிற்கும் இந்திரனாகிய பெரிய மயில்வாகனத்தின் மீது ஆரோஹணித்து ஒரு வாளால் அப்பறவையை இரண்டு துண்டாக்கினான். இங்ஙனம் துண்டிக்கப்பட்ட சூரன். அனல், காற்று, நீர், நிலம் எனவாகியும், பல தேவரூபங்களை யொரே காலத்தில் தாங்கியும் போர் புரிந்தனன். இதைக்கண்ணுற்ற குமரேசன், அச்சூரன் கொண்ட அவ்வவ்வுருவத்தை யடக்க வல்ல பல அஸ்திரங்களை விடுத்து மாய்த்தனன். சூரனும் நிற்கதியாய்த் தயங்கி நின்றனன். அப்போது ஷண்முகன் தன்னந்தனியனாய் நிற்கும் சூரன்முன் தனது விராட்ரூபத்தைக் காட்டி அவ்வடிவத்தை தரிசிப்பதற்கு அவனுக்கு ஞானக்கண்ணையும் தந்தருளினார்.

சூரன் அப்பேருருவத்தைக் கண்டு "ஏகநாதனே! எம்மையாண்டருளும் பராபரனே ! ஷண்முகா என்று துதித்துக் கைகுவித்து வணங்கினான்.

## 16. சூரஸம்ஹாரம்

உடனே பரமன் தனது பாரமேச்வரவடிவத்தை மறைத்துக் கொண்டனன். உடனே சூரன் அஞ்ஞானத்தால் மறைக்கப்பட்டவனாய் மறுபடியும் போரிழைக்க வாரம்பித்துப் பேரிருள் போல் நின்று யாவரையும் விழுங்கிவிட நினைத்தனன். அவ்விருள் கந்தபிரானது வேலாலொழிந்தது. பிறகு சூரன் கடலானான். அக்கடலையும் வேலாயுதமானது வறளச் செய்தது. பிறகு சூரன் ஒரு மாமரமாய் நின்றான். அப்போது அவ்வேலானது அம்மாமரத்தையிருகூறாய்ப் பிளந்தது. இங்ஙனம் சூரனை யிருபிளவாய்ப் பிளந்த சுடர் வேலானது பெருமகிழ்ச்சியோடு தேவநதியிற் படிந்து வந்து இறைவன் திருக்கரத்தில் அமர்ந்து நின்றது. சூரனது அவ்விரண்டு கூறுகளும் சேவலும், மயிலுமாகி நம் பெருமானக்குக் கொடியாகவும் வாஹனமாகவும் அமர்ந்தன. சிங்கமுகன் முருகனின் அன்னைக்கு சிங்கவாஹனமாயினான். தாரகன் யானை வடிவம் தாங்கி ஹரிஹரபுத்திரருக்கு வாஹனமாகித் தொண்டு புரிந்தனன். ஆகாயத்தில் தேவதுந்துபி முழங்கிற்று. தேவர்கள் மலர் மாரி பொழிந்தனர். மாலும் அயனும் தேவர்கள் பலரும் ஜெய ஜெய சப்தத்துடன் துதித்துப் போற்றினார்கள், பின்னர் யாவரும் அங்கிருந்து புறப்பட்டு ஜயந்தனைச் சிறை மீட்டுக்கொண்டு சிருச்செந்தூர் வந்து சேர்ந்தனர்.

## 17. தேவஸேனையின் திருமணம்

கடலில் மீனுருவோடு ஒளிந்து கொண்டிருந்த சூரனின் புதல்வன் ஹிரண்யன் இறந்துபோன ஸகல அஸுரர்களுக்கும் ஈமக்கடனைச் செய்து முடித்தான். சூரன் நகரமாகிய வீரமாகேந்திரமும் முருகன் திருவுளத்தின் [illegible] லில் ஆழ்ந்து நாசமாயிற்று. பிறகு வெற்றிவேல்பெருமான் தேவர்களது வேண்டுகோளுக்கிரங்கி அவர்களால் இயற்றப்பட்ட சிறந்த பூஜையையேற்றுக்கொண்டு அச்சீரலைவாயெனும் ஜயந்திரபுரத்திலிருந்து புறப்பட்டு மயில்வாஹனாரூடராய் திருப்பரங்குன்றிற்கு வந்து சேர்ந்தனர்.

தேவேந்திரனும், குஹன் தனக்குச் செய்த மஹோபகாரத்தை மனத்தில் நினைத்து அடியற்ற மரம்போல் கீழே விழுந்து "அடிகாள் ! ஐராவதத்தால் வளர்த்தப்பட்ட தெய்வ யானையை மணந்தருள்வீராக. யான் அடிகளுக்குச் செய்யத்தக்க பணியிதை விட சிறந்தது மற்றொன்று காணேன். அங்கீகரித்தருளல் வேண்டும்" என்று விண்ணப்பித்துக் கொண்டனன், முருகனும் அதற்கு இணங்கி இந்திரனை யனுக்கிரகித்தனர். தெய்வ யானையின் மணம் வெகு சிறப்பாக நடைபெற்றது. தேவர்கள் யாவரும் குமரனது திருமணத்தைக் கண்டு களித்தனர்.

## 18. வள்ளியின் திருக்கல்யாணம்

பின் தேவஸேனாதிபதி, யாவரும் பின் தொடரத்திருப்பரங்கிரியினின்றும் புறப்பட்டுச் சுவர்க்கலோகத்தை யடைந்து தேவர்களையெல்லாம் அங்கே குடியேற்றித் தேவேந்திரனுக்குப் பல தூய்மையான நதீஜலங்களால் அபிஷேகம் செய்வித்து அவனை சிங்காதனத்தின் மேல் வீற்றிருக்கும்படி செய்து நான்முகப்பிரமனால் நவரத்னமயமான முடியை அவனுக்கு சூட்டுவித்தனர்.

இந்திரன் தன்னுடைய உடல் பொருளாவி மூன்றையும் பரமனக்குத் தத்தம் செய்து பணிந்து நின்றனன். ஜயந்தனும் மனமுருகித் துதித்து நின்றான். மற்ற திக்பாலர்கள் எழுவரும் திருமாலும் அயன், முதலிய தேவர்களும், வீரபாகு முதலிய நவவீரர்களும், இலக்ஷம் படை வீரர்களும் கார்த்திக்கேயனது இன்னருளைப் புகழ்ந்து பாராட்டித் தனித்தனியாய்த் துதித்து நின்றனர்.

பின்னர் கடப்ப மாலையை யணிந்து தேவஸேனாபதி பிரம்மாவிஷ்ணு முதலிய ஸகல தேவர்களுக்கும் விடை கொடுத்தனுப்பித் தெய்வயானைப் பிராட்டியோடு இலக்கத்தொன்பது பேரும் சூழத் திருக்கைலாயத்தைச் சேர்ந்து பராசக்தியாகிய பார்வதியையும் சிவபிரானையும் வணங்கி நின்றனன். சிவபெருமானும் உமையம்மையும் மனமகிழ்ந்து உடலம் பூரித்தனர். தெய்வயானையும் சிவசக்திகளை வணங்கித் துதித்தனள். பின் முருகனும் தேவயானையும் கந்தகிரியிலமர்ந்திருக்கும் போது நாரதமுனிவரால்

வள்ளியம்மையின் செய்தியை யறிந்து முருகன் அங்கிருந்து புறப்பட்டுப் பரிபூர்ணாசலமென்னும் திருத்தணிகைக்கு வந்தனன்.

அங்கிருந்து கட்டழகுடைய ஒரு சிறந்த வேடவுருவந்தாங்கி, வள்ளிமலையை யடுத்தத் தினைபுனத்திற் காவல் புரியும் வள்ளியம்மையின் முன் தோன்றிப் பலவாறு அவளுடன் ஸம்பாஷித்துக்கொண்டு நின்றபோது வள்ளியின் வளர்ப்புத் தந்தையாகிய நம்பிராஜனும், வேடரும் அங்குவர, உடனே முருகன் ஒரு வேங்கை மரமாய் நின்றனன். அவர்கள் சென்றபின் மறுபடியும் வேடவீரர் அங்குவர இறைவன் கூன்சேர்ந்த மூப்பையுடைய நல்ல தவசி வடிவினனாகி அவர் முன் விளங்கி அவர்களணிந்து கொள்வதற்குத் திருநீறளித்தனன். பின்னர் அத்தொண்டு கிழத்தவசி, வள்ளியம்மையிடம் தேனும் தினைமாவுமுண்டு ஏழு குன்றுகளுக்கும் மேல் மேல் விளங்கும் குமரிச்சுனையின் நீரைப்பருகினான். பின் ஒரு யானையால் பயமுறுத்தப்பட்ட வள்ளிநாயகி கிழத்தவசியைக் கட்டியணைய, எம்மிறைவன் தனது சிறப்புற்றோங்கும் உண்மை வடிவைக் காட்டி நின்றனன்.

இங்ஙனந் தோன்றிய முழுமுதற்கடவுளை அவ்வள்ளியம்மையார் பணிந்து துதித்தனள். குமரவேலுந் தனது கருணாநோக்கத்தையும் திருவுள்ளத்தையுங் கொண்டு வள்ளியம்மையின் அகத்திலும் புறத்திலும் கலந்தருளினன். பின்னர் வள்ளிகாந்தன் நம்பிராஜனது மனையிலிருந்து வள்ளியைக் களவாடிச் செல்ல, அவர்களைத் தொடர்ந்து வந்த வேடர்களைச் சேவலின் ஹுங்காரத்தினால் வீழ்த்தினான். பின் வள்ளியம்மையின் விருப்பத்தின்படி அவர்களை எழுப்பி, நம்பிராஜனின் விருப்பத்தின்படி வள்ளியை விதிப்படி மணந்து, வேடர்களுக்கு அருள்புரிந்து தணிகை வெற்பில் அமர்ந்து மண்ணுலகத்தின் அடியார்கருள்புரிந்து, மேருமலையிலுள்ள குமாரசிகரத்தில் தவம்புரியும் வாமதேவமுனிவருக்கு தத்வோபதேசம் செய்தனுக்ரஹித்துவிட்டு, வள்ளிஸமேதனாய்க் கந்தவெற்பிற்கு எழுந்தருளினான்.

ஸகுணகுஹப்பிரஹ்ம பிரபாவம் முற்றிற்று.

## "கந்தபெருமானுமிதிஹாஸ புராணங்களும்"

குஹக்கடவுளின் மகிமையானது சூரபத்மாதிகளின் தோற்றம் முதல் வள்ளியம்மையின் திருக்கல்யாணம் வரையுள்ள கதாபாகங்களில் தெளிவாக விளங்குகின்றது.

குஹக்கடவுளின் "சரவணபவ" "கார்த்திகேய" "குஹ" "ஸுப்பிரம்ஹண்ய" "ஸ்கந்த" என்ற திருநாமங்களாகின்ற மஹாமந்திரங்களை வேதங்கள் உபதேசிக்கின்றன.

மனுமுதலிய முனிவர்கள் ஸ்மிருதிகளாலும் தர்மசாஸ்திரங்களாலும் முருகக்கடவுளை வழிபடுவதற்கு ஏற்ற கால தேசங்களையும் உரிய முறைகளையும் வகுத்துக் கூறுகின்றனர்.

வால்மீகி வியாஸர் முதலிய மஹரிஷிகள், ராமாயணம், பாரதம், பிராஹ்மம், ஸௌரமாகிய இதிகாஸம் புராணமுபபுராணமிவைகளால் ஆங்காங்கு கந்தபெருமானின் எல்லையற்ற பெருமைகளை பற்பல சரித்திரங்களால் வர்ணித்திருக்கினறனர்.

லக்ஷம் ச்லோகங்களடங்கிய ஸ்காந்தோப புராணத்திலுள்ள சங்கரஸம்ஹிதை என்ற நூல், ஸம்பவம், ஆஸுரம், வீரமாகேந்திரம், யுத்தம், தைவம், உபதேசமாகிய ஆறு காண்டங்களால் முருகனின் பூர்ணமான திவ்ய சரிதத்தை மிக்க மனோஹரமாக வர்ணிக்கிறது.

எஞ்சியுள்ள நூல்கனைத்துமே, முருகக்கடவுளின், கதைகளில் சிலவற்றை மட்டுமே கூறுகின்றன. சிலவற்றை கூறாமல் விட்டுவிடுகின்றன. சிலவற்றை ஒன்றோடொன்று முறன்பாடுள்ளதாக பகர்கின்றன.

முறண்பாட்டுடன் கூறப்பட்ட கந்தபெருமானின் கதாம்சங்கள் - (1) தக்ஷன் தன்னை வணங்காத சிவனிடம் கோபித்துக்கொண்டது நைமிசாரண்யத்தில் என்றும் கைலாஸத்தில் என்றும் கூறப்பட்டிருக்கிறது. (2) வீரபத்ரன் நாசம் செய்த யாகம் பிரம்மதேவனின் புதல்வனான தக்ஷனுடையதென்றும்,

பிரசேதஸ்களின் மகனான தக்ஷனுடையதென்றும் வர்ணிக்கப்பட்டிருக்கின்றது. (3) தன் கணவனையபமானித்த தன் தந்தையிடம் கோபித்துக் கொண்டு தாக்ஷாயணீதேவி தன்னுடலைத் தியாகம் செய்தது சிவபிரானுடைய ஆக்ஞையாலென்றும், தன் விருப்பத்தாலென்றும் கூறப்பட்டிருக்கிறது. (4) வீரபத்திரன் நாசம் செய்த தக்ஷ யாகத்தை சிவன் உயிர்ப்பித்தார் என்றும், பார்வதி பிழைப்பித்தாள் என்றும் கூறப்பட்டிருக்கிறது. (5) தக்ஷயக்ஞசத்திற்கு, பிரஹ்மா, விஷ்ணு இருவர்களும் வந்திருந்தனரென்றும், வரவில்லையென்றும் வர்ணிக்கப்பட்டிருக்கிறது. (6) பார்வதீதேவி மேனையின் கர்ப்பத்திலிருந்து தோன்றினாளென்றும், மானஸ ஸரஸ்ஸிலுள்ள நீலோத்பல மலரிலிருந்து வெளிவந்தாளென்று மறிவிக்கப்பட்டிருக்கிறது. (7) சிவனுக்கு பார்வதியை மணம் செய்து வைக்கும் விஷயத்தில் மேனைக்கு விருப்பமில்லாமிருந்ததென்றும் ஹிமவானுக்கு திருப்தியில்லாமலிருந்ததென்றும் சொல்லப்பட்டிருக்கிறது. (8) ஹிமவான் சிவனை வரனாக நிச்சயம் செய்து அவன் பொருட்டு கிரிஜையை கன்யாதானம் செய்தானென்றும் ஹிமவான் ஏற்பாடு செய்த ஸவயம்வர ஸபையில் பார்வதியை சிவன் மணந்தான் என்றும் கூறப்பட்டுள்ளது. (9) குஹன் தோன்றிய இடம் பிரஹ்மலோகமென்றும் பூலோகமென்றும், தோன்றிய மாதம் சித்திரை என்றும், ஐப்பசி என்றும் மார்கழி என்றும் தோன்றிய திதி ஷஷ்டி என்றும் பௌர்ணமி என்றும் தோன்றுவதற்குரிய காரணங்கள், சிவனுடைய நெற்றிக்கண்கள், பார்வதீதேவி, ஸ்வேதபர்வதம் அதனுள் இருக்கும் நெருப்புக்குண்டம் அக்னிதேவன். வாயுபகவான், சிவனுடைய ஞானசக்தி, கிருத்திகா நக்ஷத்திர தேவதைகள், நாணல்த்துறை, கங்கை, ஸ்வாஹாதேவி, ரிஷிபத்னிகள், என்று பலவாறாகக் காணப்படுகின்றன. (10) குஹப்பெருமான் ஸம்ஹாரம் செய்த தாரகாஸுரன் நமுசியின் மைந்தனென்றும், வஜ்ராங்கனின் புதல்வனென்றும் காச்யபரின் மகனென்றும் நிரூபிக்கப்பட்டிருக்கிறது. கந்தபெருமானை மணந்த தேவஸேனை, மிருத்யுவின் மகளென்றும் தக்ஷனின் பெண்ணென்றும் தேவராஜனின் புதல்வியென்றும் ஒன்றோடொன்று முரண்பாடுடைய விஷயங்கள் சொல்லப்பட்டிருக்கின்றன.

சங்கரஸம்ஹிதையில் மட்டுமே கூறப்பட்டவைகளும் வேறு நூல்களில் கூறப்படாதவைகளுமான கந்தபெருமானின் வரலாறுகள் (1) யக்ஞத்தில் ததீசி முனிவர் தக்ஷனுக்கு சிவமஹிமையுபதேசித்தல் (2) சிங்கமுகன் சூரபத்மன் பானுகோபன் முதலியவர்களின் வரலாறும் ஸம்ஹாரமும் (3) வீரபாகு முதலிய நவவீரர்கள் தோற்றம், (4) அயனைச் சிறையிட்டது. (5) அஜநிக்ரஹம் (6) வள்ளியின் திருமணமெனப்படும்.

அனேகம் பிரமாணங்களில் கூறப்படு மொரு பொருளின் உண்மையுள்ளபடி உணர வேண்டுமானால் அப்பொருளின் முழு வரலாற்றையும் கூறும் பிரமாணத்தின் நிரூபணத்தை யனுஸரித்தே யதை யுணர வேண்டும். அப்பொருளின் ஏதோ சில வரலாற்றை மட்டுமே கூறுகின்ற பிரமாணங்கள் முழு வரலாற்றையும் கூறுகின்ற பிரமாணத்தோடு எந்தெந்த கதாம்சங்களில் முரண்பாட்டையடைகின்றனவோ அவ்வம்சங்களில் ஏகதேசத்தைக் கூறுகின்ற நூல்கள் பிரமாணங்களாகாது,

ஆகவே முருகனின் கதையைக் கூறும் நூல்களுள் ஒன்றில் காணப்படாத கதாம்சமானது மற்றொன்றில் காணப்பட்டால் அதையும் அத்துடன் பிரமாணமாகச் சேர்த்துக்கொள்ள வேண்டும். ஒரு கதாம்சத்தையே முரண்பட்டதாக இரண்டு நூல்கள் கூறினால் வெவ்வேறு கல்பங்களில் நடந்தவைகளை முக்காலத்தையும் உணர்ந்த முனிவர்கள் கூறியிருக்கிறார்கள் என்று கொள்ள வேண்டும்.

வால்மீகி வியாஸ மஹரிஷிகளியற்றிய இதிஹாஸபுராணங்களில் இதற்குச் சான்றாக பல சந்தர்ப்பங்கள் இருக்கின்றன. (1) ஆஞ்சநேயர் கடலைத்தாண்டும்போது மைனாக மலையின் சிகரத்தை மாறாலுடைத்தாரென்றும், வாலாலொடித்தாரென்றும் (2) அசோகவனத்தில் ஸீதையை ராவணன் கோபித்துக்கொள்ளும்பொழுது அவனைதான்யமாலினி ஸமாதானப்படுத்தினாளென்றும், மந்தோதரி ஸமாதானப் படுத்தினாளென்றும், (3) மயனின் மகன் மாயாவியென்றும் துந்துபியின் பிள்ளையென்றும்,

(4) இந்திரஜித் லக்ஷ்மணால் கொல்லப்பட்டான் என்றும் ராமனால் கொல்லப்பட்டனென்றும் வால்மீகி ராமாயணத்தில் காணப்படுகின்றன. (5) சுகமுனிவர் கிருஹஸ்தனென்றும் ஸந்யாஸியென்றும் (6) பரீக்ஷித் மஹாராஜா தக்ஷகனென்ற பாம்பிடம் பயந்து நீரின் நடுவே மண்டபமைத்து வஸித்தாரென்றும், தக்ஷகனக்கு பயப்படாமல் விஷத்தைப் போக்கடிக்க முயற்சி செய்யாததுடன் கங்கைக்கரையில் பிராயோபவேசம் செய்து கடவுளின் கல்யாணகுணங்களையானந்தமாகக் கேட்டுக் கொண்டிருந்தரனென்றும் பாரதம் விஷ்ணுபாகவதம் தேவீபாகவதமாகிய கிரந்தங்கள் அறிவிக்கின்றன.

இங்ஙனமுள்ள விஷயங்களிலும் மேலே குறிப்பிட்டுள்ள முறையைத் தழுவியே பொருளைத் தீர்மானிக்க வேண்டும்.

நிற்க இதிஹாஸபுராணங்களின் உட்கருத்தையுணர விருப்பமுள்ளவன் மிகவும் முக்யமான ஆறு விஷயங்களை மனதில் திடமாக இருத்திக்கொண்டு இதிஹாஸபுராணங்களை படிக்க வேண்டும்.

## I. இதிஹாஸபுராணங்களின் தோற்றம்

இதிஹாஸங்கள் புராணங்கள் உபபுராணங்களாகிய பிரமாண கிரந்தங்கள் வேதங்களில் கூறியுள்ள பொருளை விளக்குவதற்காகவே முனிவர்களால் தோற்றி வைக்கப்பட்டன.

"தர்மம், அர்த்தம், காமம், மோக்ஷமிவைகளை யடைவதற்கும் அதர்மம், அனர்த்தம், துக்கம், ஸம்ஸாரமிவைகளை அடையாமலிருக்கவும் ஏற்க வேண்டிய ஸாதனங்களையும் தவிர்க்க வேண்டிய ஸாதனங்களையும் தவிர்க்க வேண்டிய கார்யங்களையும் அறிவிப்பதற்காகவே இதிஹாஸபுராணங்கள் தோன்றியிருக்கின்றன. அவைகளில் கூறியுள்ள கதைகளை அப்படியே உண்மையென்று எண்ணக்கூடாது. வேதங்கள் வகுத்த வழியிலேயே மிக்க

பழக்கமடைந்த வால்மீகி, வியாஸர் முதலியவர்கள் பலவிதமான புத்தியுள்ள மனிதர்கள் எல்லோரையும் நல்வழிப்படுத்துவதற்காகவே பலவிதமான கதைக் தொகுப்புகளுடன் கூடின இதிகாஸ புராணங்களை இயற்றியுள்ளனர்." - என்று குமாரிலபட்டர் என்ற மீமாம்ஸகர் தந்திர வார்த்திகம் 1-வது அத்யாயம், 2-வது பாதத்தில் கூறியிருக்கின்றார்.

## 2. மஹரிஷியின் மஹிமை

முக்காலத்தையுமுணர்ந்த முனிவர்கள் நம் போன்ற ஸாதாரண மனிதர்களாக மாட்டார்கள் குற்றமற்ற நல்லறிவுள்ளவர்கள். அறிவில்லாத மனிதர்களிடம் தயவுள்ளவர்கள். " நம்மால் நேரில் காண முடியாததும் முன்னோர்களான முனிவர்களால் காணப்பட்டிருக்கிறது. வியாஸர் முதலிய முனிவர்கள் தேவர்களோடு நேரில் வியவஹாரம் செய்கின்றனர் என்று அறிஞர்களால் அறிவிக்கப்படுகிறது. மந்திரங்களையும் பிராமணங்களையும் மனதை யடக்கி உலக்ததாரின் பொருட்டு கண்டு பிடித்தவர்களான முனிவர்களின் ஸாமர்த்தியத்தை நம்முடைய ஸாமர்த்தியத்துடன் ஒப்பிட முடியாது. தற்காலத்திய மனிதர்களுக்குப் போல் முன்னோர்களுக்கும் (முனிவர்களான மனிதர்களுக்கும்) தேவர்களுடன் பேசுவதற்கு ஸாமர்த்தியமில்லையென்று சொல்பவன் கண்முன்னே காணப்படு முலகிலுள்ள வித்தியாஸத்தை (ஒருவனிடமில்லாததும் வேறொருவனிடத்திலுமுள்ளதுமான ஸாமர்த்தியத்தை) எதிர்ப்பவன் ஆவான்" என்று சங்கரபகவத் பாதர்கள் சாரீரக மீமாம்ஸா சாஸ்த்திரத்தில் 1-வது அத்யாயம் 2-வது பாதம் தேவதாதிகரணத்தில் கூறியிருக்கிறார்கள்.

## 3. இதிஹாஸ புராண லக்ஷணம்

அறம், பொருள், இன்பம், வீடு இவைகளை யடைவதற்குரிய ஸாதனங்களை யுபதேசிப்பதும் முன்பு நடந்தேறிய கதையைக் கூறுவதுமான நூல்இதிஹாஸமெனப்படும்.

புரணாமென்பது (1) ஸர்கம் (2) விஸர்கம் (3) ஸ்தானம் (4) போஷணம் (5) ஊதி (6) மன்வந்தரகதை (7) ஈசனுடைய கதை (8) பிரளயம் (9) மோக்ஷம் (10) ஆச்ரயமென்ற பத்து லக்ஷணங்களுடன் கூடினதாக பாகவத புராணம் ஸ்கந்தம் 2-10 வது அத்யாயம் கூறுகின்றது. ஸர்கம், பிரதிஸர்கம், வம்சம், மன்வந்தரம், வம்சானுசரிதமென்று புராணத்திற்கு ஐந்து லக்ஷணங்களை கௌர்மம் 1-வது அத்யாயம், வாராஹம், 2-வது அத்யாயம் மார்க்கண்டேயம் 133-வது அத்யாயம், விஷ்ணுபுராணம் 3-ம், 6-வது அத்யாயங்களும் கூறுகின்றன. புராணங்களின் லக்ஷணங்களைந்தானாலும் பத்தானாலுமவைகள் கடவுளின் படைத்தல், காத்தல், அழித்தலாகிய முத்தொழிலை விளக்குவதன் மூலம் கடவுளினுண்மையுருவத்தை யடைய இன்றியமையாத வழிகளையும் கூறுவதே நோக்கமெனக் கொள்ள வேண்டும்.

## 4. இதிஹாஸபுராண வக்த்ரு லக்ஷணம்

1. “குறைந்த படிப்புள்ளவனும் வேதத்தை விளக்கப்புறப்பட்டவனுமான மனிதனிடமிருந்து வேதமானது ‘என்னை ஏமாற்றிவிடப்போகிறானே’ என்று அச்சமடைகின்றது. 2. இதிஹாஸங்களையும் புராணங்களையும் நன்கு கற்றுணர்ந்து வேதங்களின் உட்பொருளை விளக்க வேண்டும். 3. வேதங்களின் ஆரம்பத்தில் கூறப்பட்டுள்ள தர்மத்தை தர்மசாஸ்திரங்கள் தெளிவாக விளக்குகின்றன. வேதங்களின் முடிவில் வர்ணிக்கப்பட்டுள்ள பிரம்ஹஸ்வரூபத்தை இதிஹாஸபுராணங்கள் நிரூபிக்கின்றன. 4. எவனொருவன் அங்க சாஸ்திரங்கள் ஆறையும் உபநிஷத்துகளையும் நான்கு வேதங்களையும் கற்றுணர்ந்தும் புராணங்களை நேர்மையாய் படித்துணரவில்லையோ அவன் அறிவுள்ளவன் ஆக மாட்டான்.” - என்று பாரதம் ஹாரீதஸ்மிருதி முதலிய புண்ணிய கிரந்தங்கள் பறைசாற்றுகின்றன.

## 5. இதிஹாஸபுராண ச்ரோத்ரு லக்ஷணம்

இதிஹாஸபுராணங்களை கேட்பவர்களுயர்ந்தவர்கள் தாழ்ந்தவர்களென்றிருவகைப்படுவார்கள், உயர்ந்தவர்கள், 1) சாதகம், 2) ஹம்ஸம், 3) சுகம், 4). மீனம் என நான்கு வகையாகப்பிரிக்கப்படுகின்றனர். வானத்திலிருந்து விழும் நீரைப் பருகுவதற்காக வானத்தை நோக்கி நிற்கும் சாதகமென்னும் பறவை (கழுத்தில் த்வாரமள்ள பறவை) போல் ஸாராம்சத்தையே எதிர்பார்த்துக்கொண்டிருக்கும் ச்ரோதா சாதகமெனப்படுகிறார். 2) பாலுடன் சேர்த்த நீரை விளக்கி ஸாரமான பாலை மட்டுமே உட்கொள்ளும் ஹம்ஸப்பறவை போல், ஸாரமில்லாத விஷயங்களை விலக்கி ஸாரமுள்ளவற்றையேற்றுக் கொள்பவனான ச்ரோதா - ஹம்ஸமெனப்படுகிறான். 3) நல்ல சொற்களைச் சொல்லி பழக்கமடைந்த கிளி போன்று ஸபையிலுள்ளவர்களையும், பேச்சாளனையுமுற்சாக மூட்டும் வகையிலழகாகப் பேசுபவன் சுகச்ரோதா வென்றழைக்கப்படுகின்றான். 4) கடலினுள் கண் கொட்டாமல் ர்ஸத்தை யனுபவிக்கும் மீனைப்போல் வேறொன்றையும் கவனிக்காமல் கதாஸாரத்தை மட்டிலும் எவனுனுபவிக்கின்றானோ அவன் மீனச்ரோதாவென சொல்லப்படுகின்றான்.

தாழ்ந்த ச்ரோதாக்கள் (1) செந்நாய் (2) பூருண்டம் (3) காளை (4) ஒட்டகை யென்று நான்கு வகைப்படுகின்றனர். (1) காடுகளில் த்வாரங்களுடன் கூடின மூங்கில்களிலிருந்து வருமோசையை (புல்லாங்குழலோசை போன்ற ஓசையை) மெய்மறந்து கேட்டுக்கொண்டிருக்கும் மான்களை, செந்நாய் கொடூரமான சப்தத்தால் துன்புறுத்துவது போல் தன்னை மறந்து கதாஸாரத்தை யனுபவிக்கும் ச்ரோதாக்களுக்கு உறக்கப்பேசுவதால். வேதனையை உண்டுபண்ணுபவன் விருகச்ரோதாவெனக் கருதப்படுகிறான். (2) ஹிமயமலையின் சிகரத்தில் வஸிக்கும் பூருண்டமென்னும் பறவை, மற்ற பறவைகளை சப்தம் கொடுக்கபமலிருக்கும்படி தடை செய்து கொண்டு தானுறக்கக் கூக்குறலிடுவது போன்று ஸபையிலுள்ளபவர்களை "பேசக்கூடாதெ"ன்று சப்தமிடுவதனாலேயே ஸபையினமைதியைக் குலைப்பவன்

பூருண்ட ச்ரோதாவெனப்படுவான். (3) எஜமானனால் சேகரித்து வைக்கப்படும் தவிடு, பிண்ணாக்கு முதலிய ஆகார ஸாதனங்களுடன் களிமண்ணையும் வேறுபடுத்தாமலுட் கொள்ளும் காளை காளை மாட்டைப்போலெவனொருவன் புராணம் சொல்பவனால் (அறியாமையால்) கூறப்படும் பயனற்ற மட்டமான பொருளையுமேற்றுக் கொள்கிறானோ அவன் விருஷ ச்ரோதாவென்று கூறப்படுகிறான். (4) இனிப்பான பொருள்களை விலக்கி கசப்புப்பொருளையே உட்கொள்ளும் ஒட்டகம் என்ற விலங்குபோல் எவன் ஸாரமான விஷயத்தையொதுக்கி விட்டு உபயோகமற்ற விஷயத்தை எடுத்துக் கொள்கின்றானோ அவன் உஷ்டர ச்ரோதா எனப்படுகிறான் என்று வாயுபுராணமும் ஸ்காந்த மஹாபுராணமும் உபதேசிக்கின்றன.

## 6. சிஷ்ய லக்ஷணம்

ஆசிரியர் சிஷ்யர்களை யாராய்ந்து பொருக்குவதற்காக சிஷ்யர்கள் (1) கதளீகாண்ட பிரதிபன் (2) ஆர்த்ரேந்தன பிரதிபன் (3) கர்ப்பூரபிரதிபனென்று மூன்று கூறாகப் பிரிக்கப்படுகின்றனர். (1) ஆற்றங்கரையோரத்தில் நல்ல ஈர்பபமுள்ள வாழை மரத்தனடித் தண்டையொரு தீப்பந்தத்தாலெரிக்க முடியாததுடன் சில நேரத்திற்குள்ளாகவே பந்தம் அணைந்து விடும் வாழையடிமரத்தை யொத்த புத்தியுடைய சிஷ்யனை (தமோகுணம் நிறைந்தவனை) ஆசிரியர் ஏற்பது கூடாது ஆசிரியருக்கே நாசம் ஏற்படும்,என்பது கருத்து. (2) நனைந்த விறகில் தீயைப்பற்றவைக்க விருப்பமுள்ளவன் விசிறியால் வீசி தீயை விறகில் பற்றவைத்துவிட்டால் பின்னர் தீ ஒருபொழுதும் அணையாதது போல மிகவும் தாமதமாக விஷயங்களை கிரஹிக்கும் இயல்புள்ள மாணக்கனுக்கு (ரஜோகுணபிரதானத்துக்கு) பல தடவைகளுபதேசித்தால் தீ போன்ற அறிவு ஏற்படுகின்றது. இவனே ஆர்த்ரேந்தன பிரதிபன் என்ற சிஷ்யனாவான். (3) கட்டிச் சூடமானது தீயின் அருகாமையை அடைந்தவுடனேயே தீயைப்பற்றி விடுகின்றது. அங்ஙனம் எவனுடைய புத்தியானது ஆசிரியனுபதேசத்தை கேட்ட மாத்திரத்திலேயே

அறிவைப் பெற்றுவிடுகின்றதோ அவனே உத்தம சிஷ்யனாவன். (ஸத்குவண பிரதானனாகிறான்) கற்பூர ப்ரதிபன் என்றிவனை அழைக்கின்றனர். இங்ஙனமுள்ள ஆறு விஷயங்களை இதிஹாஸ புராணங்களினுட்கருத்தை யறிய விரும்பு மொவ்வொருவனும் விமர்சித்து முதலாவதாக தெரிந்து கொள்ள வேண்டியது மிகவுமவச்யம்.

பகுத்தறிவுள்ள மனிதனால் அவசியம் அறியப்பட வேண்டியவைகளும் புலன்களின் வழியாய் புரிந்து கொள்ள முடியாதவைகளும் பிறந்தவனிறக்கும் வரையிலும் விழித்துக் கொண்டவனுறங்கும் வரையிலும் துன்பத்தை தவிர்ப்பதற்கும் இன்பத்தை அடைவதற்கும் உரிய நற்ச் செய்கைகளையும் அதன் பலனைக் கொடுக்கும் கடவுளின் உண்மை ஸ்வரூப்தையும் அறிவிக்கின்ற பிரமாணங்களே வேதங்கள் எனப்படும்.

கடமையை மறந்து உலகில் உழண்டு கிடப்பவர்களான மாந்தர்களை தட்டியெழுப்பி தத்வத்தை உபதேசிக்கவே முனிவர்கள் தோன்றினர். இவ்வுலகத்தை மறந்து கடவுளுடன் இரண்டறக் கலந்து உண்மையையுணர்ந்து நம் போன்ற மந்த மதிகளின் நன்மைக்கு வேண்டியவற்றை உபதேசித்து மகரிஷிகள் இதிகாஸபுராணங்களை இயற்றினர். வேதங்களை விளக்கவே இதிஹாஸ புராணங்கள் தோன்றின. ஆகவே வேதங்களை நன்கு உணர்ந்தவர்களாலேயே இதிகாஸபுராணங்கள் கூறப்பட வேண்டும். இவைகளைக் கேட்பவன் ஹம்ஸம், சாதகம், மீனம், இவைகள் போன்று கேட்க வேண்டும். கற்பூரம் போன்ற புத்தியுள்ளவனுக்கே இவைகளை உபதேசிக்க வேண்டும். என்ற முறையை ஆராய்ந்து பார்த்தால் இதிஹாஸபுராணங்களில் குறை கூறுவதற்கு எள்ளளவும் இடமில்லை.

**பரிசுத்தமான புராணங்களை பழிப்பவர்கள் அறிவிலிகள்**

1. மேனாட்டிலேயே பிறந்து வளர்ந்த வெள்ளையர்கள் நம் நாட்டிலுள்ள இதிஹாஸபுராணங்களை ஆராய்ச்சி செய்து அவைகள் பால் தங்கள் கருத்துக்களை புத்தக வடிவங்களில் வெளியுட்டுள்ளனர். ஆராய்ச்சியாளர்களுள் பலரும் நம் நாட்டிற்குள் வந்தவர்களே அல்லர்.

இங்கு வந்தவர்கள் சிலரும், ஆங்கிலத்தில் நல்ல பயிற்சி பெற்று வடமொழியில் கொஞ்சம் அறிவுள்ளவர்களும் வெள்ளையர்களிடத்தில் நன்மதிப்புகொண்டவர்களுமான மனிதர்களிடமிருந்து வடமொழியை உணர்ந்து அதனுதவியால் தங்கள் கருத்துக்களை கூசாமல் புத்தகங்களாக எழுதி வெளியிட்டுள்ளனர். வெள்ளையர்கள் எழுதிய அப்புத்தகங்களில் சிற்சில விஷயங்கள் நேர்மையாக குறிப்பிடப்பட்டிருப்பினும் அவர்களால் புரிந்து கொள்ள முடியாததும் புரிந்து கொள்ளாததுமான விஷயங்களைப்பற்றித் தங்களுக்குத் தோன்றியவைகளையெல்லாம் குறித்திருக்கின்றனர்.

இச்சிறிய நூலில் வெள்ளையர்களால் கூறப்படும் அறுவருக்கத்தக்க கருத்துக்களை விரிவாக மறுக்க நான் விரும்பவில்லை. ஆனாலும் பாரதியர்களும் ஆங்கிலத்தில் நன்கு பயிற்சி பெற்றவர்களுமான விவேகானந்தர், அரவிந்தகோஷ், ரவீந்திரநாததாகூர் இவர்களுடைய வெள்ளையர்கள் நூல்களைப்பற்றி கொண்டுள்ள கருத்துக்களை இங்கு தருகின்றேன். ஸ்ரீவிவேகானந்தர் ஐரோப்பா கண்டத்திலிருக்கும் ஐரோப்பியர்களுக்கு இப்பாரதத்திலுள்ள வேதாந்த தத்வத்தை விளக்கச் சென்ற போது "ஆத்மா, சிருஷ்டி, கர்மா, ஞானம், மோக்ஷம், பிரம்மா இச்சொற்களின் பொருளை விளக்க மிக்கப்பொருத்தமான சொற்கள் உங்கள் பாஷையில் இல்லையே" என்று அறிவித்திருக்கிறார். (இப்பொருட்களைப் பற்றிய எண்ணங்களும், எழுத்துக்களும், பேச்சுக்களும் பாரதத்தைச் தவிர்த்த தேசங்களில் வசிக்கும் மனிதர்களிடம் தாராளமாக வளரவில்லையென்பது கருத்து) உலகவிவகாரங்களிலிருந்து விலகி யோகத்திலீடுபட்ட அரவிந்த் கோஷ் என்ற வங்காளியொருவர் "Maxmuller (மாக்ஸ்மில்லர்) முதலிய வெள்ளையர்கள் இங்கு வராமலேயே தங்கள் இருக்குமிடத்திற்கு சிரமமில்லாமல் ஆங்கில மொழியின் வழியாக கிடைத்த வடமொழி நூலின் அறிவாலும் தங்கள் பெட்டியிலுள்ள அகராதிப் புத்தகங்களின் உதவியாலும் கிடைத்த வடமொழிப் பழக்கத்தால் வேதம் முதலிய நூல்களின் பொருளைக் கூறுவதும், பாரதத்தில் பிறந்து வளர்ந்து வடமொழி இலக்கிய இலக்கணங்களில் தேர்ச்சி பெற்று முறையாகத்

தெரிந்தவர்களிடமிருந்து வேதம் முதலிய நூல்களை கற்றுணர்ந்தவர்களான ஸாயணர் முதலிய மகான்களால் கூறப்பட்ட வியாக்யானங்கள் நேர்மையற்றவை என்று கூறுவது உலகத்திலேயுள்ள தவறுதல்களுள் பெரியதோர் தவறுதலாகும்". என்று கூறியிருக்கின்றார். "Message of the Forest" (காட்டிலுள்ள முனிவர்களின் ஸந்தேசம்) என்ற நூலில் உபநிஷத்துக்களுள் அடங்கிய பொருளை ஸகல ஸௌகரியங்கள் நிறைந்ததும் அழகு வாய்ந்ததுமான அமெரிக்கா நகரத்தில் வஸிப்பவனுக்கு எளிதில் அறிய இயலாது. அமைதியான தபோவனத்தில் தன்னந்தனியே நின்று உடலையும் உலகத்தையும் மறந்த தீரனான முனிவருக்கே முடியுமானது" என்று எச்சரித்திருக்கிறார்.

நம் நாட்டினர் சிலரும் மேனாட்டினரின் நூல்களை முதலில் படித்து அவைகளைப் பெரிதும் மதித்து இதிஹாஸபுரணாங்களில் தவறான எண்ணம் கொள்கின்றனர். உதாரணமாக ஒரு விஷயத்தை இங்கு குறிப்பிடுகின்றேன். "Skanda, the Alexander Romance in India" என்ற ஆங்கிலத்தில் ஒரு நூலை ஒருவர் இயற்றியிருக்கிறார். கிரீக் தேசத்திலுள்ள அலெக்ஸாண்டர் அரபியாவில் Iskandar என்று அழைக்கப்பட்டு இந்தியாவில் ஸ்கந்தரென்று கொண்டாடப்படுகிறார். கிரீக் தேசத்தில் சிப்பாய்களுக்கு ஆயுதம் (சூலம்) குந்தமே, அலெக்ஸாண்டருக்கும் முக்யமான ஆயுதம் குந்தமாகவேயிருந்தது. ஆகவே (Lancebearer) சக்திதரன் என்ற பெயர் ஏற்பட்டது. (Persia) பாரசீகத்திலுள்ள (Darius) தாரவஸ் (Mazda) மாஸ்டா (Ahura) அஹுரா என்ற வீரர்களை போரில் வென்றமையால் தாரகாரி மகிஷாஸுரமர்த்தனன் என்ற பெயர் வந்தது. மௌர்யன் சந்திரகுப்தன் அலெக்ஸாண்டரால் கிழடக்கப்பட்டவனாய் அவரைத் தெய்வமாக கொண்டாடியபடியால் மயூரவாகனன் என்ற பெயர் ஏற்பட்டது. அலெக்ஸாண்டரின் மனைவி (Rexana) ரக்ஸேனா என்பவளே தேவசேனை ஆகின்றாள். (Zeus) ஸௌஸ் என்ற அலெக்ஸாண்டரின் தந்தையே சிவன் என்று வழங்கப்படுகிறார். (Indus) சிந்து நதிவழியாக (Kush) குஷ் என்ற மலையைக் கடந்து அலெக்ஸாண்டர் இந்தியாவுக்கு வந்தமையால் சிந்து தீரவாசி க்ரௌஞ்சதாரணன் என்ற பெயர்கள் வந்தன.

இளம் வயதிலேயே படைத்தலைவனாயிருந்தலும் பல நாடுகளில் தெய்வப்புதல்வன் என்று கூறப்படுதலும் அலெக்ஸாண்டரே ஸ்கந்தரென்று உறுதியைச் செய்கின்றது" என்று (Comparative Philology) பாஷா சாஸ்திரத்தில் தனக்கு ஏற்பட்டுள்ள முழுத்திறமையையும் காட்டி இந்நூலை இயற்றியிருக்கிறார். இது முற்றிலும் தவறு.

அலெக்ஸாண்டர் தோன்றுவதற்கு நெடுநாட்களுக்கு முன்பாகவே இருப்பவைகளாக வெள்ளையர்களாலேயே ஒத்துக்கொள்ளப்படும். உபநிஷதங்களுள் ஒன்றான சாந்தோக்யம் என்ற சாமவேத உபநிஷத்தில் "ஸ்கந்த" என்ற பதமானது இருப்பதால் அப்பதத்தை யொட்டி கட்டிய கதை மிகமட்டமான விஷயம் என்பது வெளிப்படை. நிற்க தென்னிந்தியாவிற்கு விஜயம் செய்யாத அலெக்ஸாண்டர் என்ற ஸ்கந்தரின் பெருமையானது தென்னிந்தியாவில் பரவியிருப்பது எவ்விதம் பொருந்தும் என்று அந்நூலாசிரியர் ஆராய்ச்சி செய்யவில்லை போலும். சங்கராச்சார்யார் இயற்றிய சுப்ரமண்ய புஜங்கத்தில் உள்ள சிந்துபதம் நதியைக் குறிப்பதில்லை. திருச்செந்தூரின் அருகாமையிலுள்ள கடலைக் குறிப்பதற்காகவே சிந்து பதம் உபயோகிக்கப்பட்டிருக்கிறது. ஆகவே அலெக்ஸாண்டர் ஸ்கந்தரென்று கூறுவது முற்றிலும் அர்த்தமற்றது என்று கொள்ள வேண்டும்.

3. நம்நாட்டிலுள்ளவர்களும் ஆஸ்திகர்களுமான சிலர் மதத்தின் பெயரால் ஏற்பட்டுள்ள மதவெறியால் சிவனைக்குறிக்கும் புராணங்கள் தமோகுணம் நிறைந்தவைகள் என்றும் விஷ்ணுவைக்குறிக்கும் புராணங்கள் அவ்வாறு அல்ல என்றும் பயனற்ற சர்ச்சைகளால் சாதுக்களின் மனத்தைப் புண்படுத்துகின்றனர். மகரிஷிகளால் இயற்றப்பெற்ற இதிஹாஸபுராணங்களுள் ஒன்றும் தமோகுணம் பொருந்தியதல்ல. இவ்வாறு கூறுபவர்களே தமோகுணம் நிறைந்தவர்கள் என்று எண்ணி அவர்களின் சேர்க்கையைத் தவிர்ப்பது நன்று.

4. புராணவிமரிசனம் என்ற நூலை இயற்றிய ஸ்ரீசுந்தரேசசாஸ்திரிகள் "கந்தபுராணம் நம்பத்தகுந்ததல்ல. அதில் கூறிய கதை ராமாயணக்கதையை ஒத்திருக்கிறது. சமீபகாலத்தில் காஞ்சியிலுள்ள காச்யப சிவாச்சாரியார் கந்தபுராணத்தை இயற்றினார். கந்தனுக்கு வள்ளி கல்யாணம் கிடையாது". என்று தம் கருத்தை அந்நூலில் குறித்திருக்கிறார். இது முற்றிலும் வெறுக்கத்தக்கது. கந்தபுராணத்திலும் ராமாயணத்திலும் உள்ள கதைகளுக்கு பல அம்சங்களில் ஒற்றுமையிருப்பது உண்மையே. அதனால் கந்தபுராணம் நம்பத்தக்கதல்ல என்று கூறுவது தவறு. இரண்டு மனிதர்கள் பற்பல அம்சங்களில் ஒருவரையொருவர் அனுசரித்திருப்பதால் ஒருவரின் வாழ்க்கை நம்பத்தகுந்ததல்ல என்று கூறுவது போலாகும். ராமன் ஸீதையையும், கண்ணன் ருக்மணியையும் மணந்தது போல் கந்தபெருமான் வள்ளியை மணந்தான் என்ற கதையை சிவபுராணமும் கந்தபுராணமும் சுப்ரமண்ய புஜங்களும் முத்துஸ்வாமி தீக்ஷிதரின் கீர்த்தனங்களும் வர்ணிக்கின்றன. இங்ஙனம் மகான்களால் போற்றப்படுகின்ற வள்ளிகல்யாணத்தை சாஸ்திரிகள் மறுப்பது மிகவும் சாகஸமே. ஆகவே முன்னோர்களின் நூல்களை அறிய விரும்புவன் முன்னதாகவே தான் ஒரு தீர்மானத்தை செய்து கொண்டு அந்நோக்கத்தோடு நூல்களை படிப்பது மிகவும் தவறு. அவ்விஷயத்தில் சங்கரபகவத் பாதர்கள் கூறியதொருபதேசத்தை நாம் நினைவிற்கு கொண்டு வரவேண்டும்.

**वेदार्थजिज्ञासुभिः पूर्वनिर्णीताः स्वाभिप्रायाः नोपनिषत्सु अन्वेषणीयाः अपि तु निर्मत्सरैः श्रुत्यर्थो निर्णेतव्यः**

வேதங்களின் பொருளை அறிய விரும்புவர்கள் முன்பே தீர்மானித்த தங்களுடைய அபிப்ராயங்களை வேதங்களில் தேட வேண்டாம். பொறாமையைத் தூரத் தள்ளிவிட்டு வேத சப்தங்கள் தரும் பொருளை விசாரித்துத் தீர்மானித்தல் வேண்டும் என்று பகவத்பாதர் கூறியிருக்கிறார். நிற்க சாஸ்திரிகள் கூறுகின்றபடி இக்காலத்தில் ஒரு பண்டிதர் ஸ்கந்த புராணத்தை இயற்றியுள்ளார் என்று வைத்துக்கொள்வோம். ஆனாலும் மற்ற இதிகாச புராணங்களைப் போல வேதங்களின் பொருளை

இப்புராணம் கூறுகின்றபடியால் யாதொரு தடையுமின்றி இக்கந்தபுராணத்தை ப்ரமாணம் என்று ஏற்றுக்கொள்ள வேண்டும், இவ்விஷயத்தில் மஹாகவி காளிதாஸர் கூறியதை யாவரும் நினைவிற்குக் கொண்டுவர வேண்டும்,

पुराणमित्येव न साधु सर्वं
न चापि काव्यं नवमित्यवद्यम् ।
सन्तः परीक्ष्यान्यतरद्भजन्ते
मूढः परप्रत्ययनेयबुद्धिः ॥

பழையது என்ற காரணத்தால் எல்லாம் நல்லதல்ல, புதியது என்ற காரணத்தினால் எல்லாம் கெட்டதும் அல்ல. பிறர் புத்திக்கு அடிமையான மனிதன் பிறர் கூறுவதைக் கேட்டும் மூடனாவான். பகுத்தறிவுள்ள மனிதர்கள் நல்லது கெட்டது இன்னதென்று ஆராய்ந்தறிந்து கெட்டதைத் தள்ளி நல்லதை ஏற்றுக்கொள்வார்கள் என்று மஹாகவி கூறியிருக்கிறார்.

ஆகவே விவேகிகளான நாம் ஸ்கந்தபுராணம் பிரமாணம் என்றும் அதில் போற்றப்படும் குஹக்கடவுள் நம்மால் வழிபட வேண்டிய தெய்வம் என்றும் உணர்ந்து குஹப்பெருமானை வழிபட்டு அவன் கருணைக்கு இருப்பிடமாகுவோமாக.

गुहावतारस्य रहस्यमुत्तमं कृतङ्गुरुस्वामिबुधेन द्वयम्
पवित्रयोः स्कन्दपदारविन्दयोः

(குஹாவதார ரஹஸ்யம் முற்றிற்று)



(சங்கரஸம்ஹிதையில் சூரபத்மனுக்கு தந்தை கச்யபராலும், அன்னை மாயாதேவியாலும், சுக்ராசாரியராலும் செய்துள்ள உபதேசங்களும் பாரதம் "வனபர்வ"த்திலுள்ள கார்த்திகேய ஸ்தோத்திரமும், ஸ்ரீ சங்கரபகவத் பாதர்கள் இயற்றிய ஸுப்பிரம்ஹண்ய புஜங்க ஸ்தோத்திரமும் அனுபந்தமாகச் சேர்க்கப்பட்டிருக்கின்றன.)

# அனுபந்தம்

## I. கச்யபோபதேசம்

(ஸ்காந்தோபபுராணம் சங்கரஸம்ஹிதை ஆஸுரகாண்டம் 1, 2, அத்யாயங்கள்)

तप एव सदा कार्यं युष्माभिर्विजितेन्द्रियैः ।
तपसा देवताः पूर्वं देवतात्वं प्रपेदिरे ॥ १
ऋषयश्च तथा केचिज्जीवन्मुक्तिं प्रपेदिरे ।
त्रिपदार्थस्य विज्ञानं सम्पाद्यं सर्वदानघाः ॥ २
विज्ञानेन शिवप्राप्तिर्लभ्या च सुखरूपिणी ।
धर्मोपि सर्वदा कार्यः पापविच्छित्तये तथा ॥ ३
धर्मेण केचिदृषयः स्वर्लोकं लेभिरे पुरा ।
कृपा च सर्वभूतेषु नित्यं कार्या विचक्षणैः ॥ ४
एवमुक्तगुणोपेतैर्युष्माभिर्वीतकिल्बिषैः ।
शम्भोरनुग्रहाच्चापि प्राप्यते नात्र संशयः ॥ ५
इहचामुत्रचाप्येति सिद्धिं शम्भोरनुग्रहात्
तपसा ब्रह्मविष्ण्विन्द्रप्रमुखाश्च सुरोत्तमाः ॥ ६
शिवस्यानुग्रहं प्राप्य स्वां स्वां स्थानमवापिरे ।
ऋषयश्च पुरा केचित्तपः कृत्वा सुदुश्चरम् ॥ ७

शम्भोरनुग्रहं प्राप्य स्वामीष्टञ्च ध्रुवं गताः
तस्मात्सर्वप्रयत्नेन युष्माभिस्तपसा शिवम् ॥ ८
तोषयित्वात्र लब्धव्या भुक्तिर्मुक्तिः परत्र च ।
अस्ति चात्र कथा पुण्या युष्माकन्तां ब्रवीम्यहम् ॥ ९
पूर्वं तपःप्रभावेन कुत्सः कन्याम्मृतामपि ।
पुनस्संजीवयामास स्वापादुद्बुद्धामिव क्षणात् ॥ १०
तथान्यत्र गजस्यापि देवत्वं दत्तवान्खलु
तथा तपोमहिम्नैव मृकण्डुश्चाप्यजीजनत् ११
मृकण्डुश्च तथा पुत्रं ब्रह्मविष्ण्विन्द्रपूजितम् ।
मार्कण्डेयन्तु तपसा लब्धवान्परया मुदा ॥ १२
मार्कण्डेयस्तु तपसा प्रसाद्य परमेश्वरम्
मृत्युमप्यजयन्नित्यं पदमप्याप्तवान् खलु ॥ १३

1. தப ஏவ ஸதாகார்யம் யுஷ்மாபிர்விஜிதேந்திரியை :
தபஸா தேவதா : பூர்வம் தேவதாத்வம் ப்ரபேதிரே
2. ரிஷியச்ச ததா கேசி ஜ்ஜீவன் முக்திம் கதா : கில
த்ரிபதார்த்தஸ்ய விக்ஞானம் ஸம்பாத்யம் ஸர்வதாநகா :
3. விக்ஞானேன சிவப்ராப்தி : லப்யாச ஸுகரூபிணி
தர்மோபிஸர்வதாகார்ய : பாபவிச்சித்தயே ததா
4. தர்மேண கேசித் ரிஷய : ஸ்வர்லோகம் லேபிரே புரா
கிருபா ச ஸர்வபூதேஷு நித்யம் கார்யாவிசக்ஷணை :
5. ஏவமுக்தகுணோபேதைர்யுஷ்மா பிர்வீத கல்மஷை :
சம்போரனுக்ரஹாச்சாபி ப்ராப்யீதேநாத்ர ஸம்சய :
6. இஹசாமுத்ரசாப்யேதி ஸித்திம் சம்போரனுக்ரஹாத்
தபஸா பிரஹ்ம விஷ்ணுவிந்தரப்ரமுகாச்ச ஸுரோத்
தமா :

7. சிவஸ்யானுக்ரஹம் பிராப்ய ஸ்வம் ஸ்வம் ஸ்தானமவாபிரே
ரிஷயச்ச புரோகேசித்தப : கிருத்வா ஸூதுச்சரம்
8. சம்போரனுக்ரஹம் பிராப்ய ஸ்வாபீஷ்டம் ச த்வரும்கதா :
தஸ்மாத் ஸர்வப்ரயத்னேன யுஷ்மாபிஸ்தபஸாசிவம்
9. தோஷயித்வாத்ர லப்தவ்யா புக்திர்முக்தி : பரத்ர ச
அஸ்திசாத்ர கதாபுண்யா யுஷ்மாகம் தாம் பிரவீம்யஹம்
10. பூர்வம் தப : ப்ரபாவேன குத்ஸ : கன்யாம் ம்ருதாமபி
புன : ஸஞ்ஜீவயாமாஸ ஸ்வாபாத் புத்தாமிவ க்ஷணாத்
11. ததான்யத்ர கஜஸ்யாபி தேவத்வம் தத்தவான் கலு
ததா தபோமஹிம்னைவ மிருகண்டுஞ்சாப்யஜீஜனத்
12. மிருகண்டுச்ச ததா புத்ரம் பிரஹ்மவிஷ்ண் விந்த்ரபூஜிதம்
மார்க்கண்டேயந்து தபஸா லப்தவான் பரயாமுதா
13. மார்க்கண்டேயஸ்து தபஸா பிரஸாத்ய பரமேச்வரம்
மிருதயுமப்யஜயந்நித்யம் பதமப்யாப்தவான் கலு

(கச்யபர், சூரபத்மன் முதலிய மூன்று மைந்தர்களுக்கு உபதேசிப்பது) புலன்களையடக்கி மாபெரும் தவத்தையே செய்து வாருங்கள் பிள்ளைகளே ! அப்பெரும் தவத்தாலேயே தேவர்கள் தேவத்தன்மையைப் பெற்றனர். முனிவர்களுள் சிலர் அத்தவத்தால் முக்தியுமடைந்தனர். குற்றமற்ற குழந்தைகளே ! எப்பொழுதும் (ஸ்தூலம், ஸூக்ஷ்மம், காரணம், / படைத்தல், காத்தல், அழித்தல், / அயன், மால், சிவன், / கர்மா, பக்தி, ஞானம்,/ ஸத்வம், ரஜஸ், தமஸ், / ஜாக்ரத், ஸ்வப்னம், ஸுஷுப்தி, / விச்வன், தைஜஸன், பிராஜ்ஞன், / விராட், ஹிரண்யகர்பன், ஈசுவரன் ) ஆகிய முப்பொருளின் உண்மை அறிவைப் பெற வேண்டும். அவ்வுண்மையறிவால் இன்பவடிவமான சிவனை அடையலாம், பாவங்களை அறவே நாசம் செய்வதற்காக தர்மத்தை கடைப்பிடித்தல் வேண்டும். இந்த தர்மத்தை அனுஷ்டித்ததால் முனிவர்களில் பலர் தேவலோகத்தை அடைந்திருக்கின்றனர். குழந்தைகளே ! அறிவுள்ளவர்களான உங்களால் எல்லா பிராணிகளிடத்திலும் தயவு காட்டப்பட வேண்டும். இங்ஙனம் கூறப்பட்ட குணங்களுடன் கூடினவர்களாகவும், பாபம் அற்றவர்களாகவும் இருந்தால்

சிவனருளால் விரும்பியவற்றை நிச்சயமாகப் பெறுவீர்கள் ஸம்சயமில்லை. இஹத்திலும் - பரத்திலும் சிவனருளாலேயே மனிதன் பெருமையைப் பெறுகிறான். தவத்தாலேயே, பிரமன், விஷ்ணு, இந்திரன், முனிவர்கள் சிவனருளைப் பெற்று அவரவர்களின் பெருமை வாய்ந்த ஸ்தானத்தையடைந்தனர். மைந்தர்களே! ஆகையால் பெருமுயற்சியுடன் நீங்களும் தவத்தால் சிவனை ஸந்தோஷப்படுத்தி போக மோக்ஷங்களை அடைவீர்களாக! இவ்விஷயத்தில் புண்ணியமான கதைகளைக் கூறுகின்றேன். இறந்துபோன தன் பெண்ணை குத்ஸர் என்ற முனிவர் தவத்தால் பிழைப்பித்தார். ஒரு யானை தவத்தால் தேவத்தன்மையைப்பெற்றது. தவத்தாலேயே ஒரு முனிவர் மிருகண்டு என்ற ஒரு பெரிய முனிவரைப் புதல்வராக பெற்றார். மிருகண்டு முனிவரும் தவத்தாலேயே மார்க்கண்டேயரென்ற முனிவரை மைந்தராக அடைந்தார். அம்மார்க்கண்டேய முனிவரும் தவத்தாலேயே சிவனருளைப் பெற்று மிருத்யுவை வென்று அழியாத நிலையைப் பெற்றார்.

(தவத்தால் சிவனருளைப் பெறுவது, தத்வஞானமடைதல், சிவனையடைதல், பாவத்தைப் போக்க தர்மத்தை அனுஷ்டித்தல், பாவம் வராமலிருக்க பிராணிகளிடத்தில் தயவுடனிருத்தல் இவைகளால் போகத்தையும் மோக்ஷத்தையுமடையும்படி கச்யபமுனிவர் செய்த உபதேசம் "ஸத்வகுணம்" நிறைந்தது.)

## மாயாதேவியினுபதேசம்

(சங்-ஸம்-அஸுரகா-3-அத்)

यदाह वचनं युष्मत्पिता तपतां वरः ।
महतां योगिनामेव, युष्माकं तद्वदाम्यहम् ॥
ऐश्वर्यं शौर्यमायुश्च तथा कीर्तिः प्रथीयसी ।
प्रभुत्वमार्जनीयं वै युष्माभिः पौरुषाश्रयैः ॥
वटद्वीपमिति ख्यातमुदग्भागे क्षितेर्महत् ।
तत्र गत्वा वीरयागं कुरुतेश्वरतुष्टये ॥

अपेक्षितानि द्रव्याणि तानि तस्य ददाम्यहम् ।
तत्र प्रसन्ने गौरीशे लभ्यतां यन्मयोदितम् ॥

யதாஹ வசனம் யுஷ்மத்பிதா தத்தபதாம் வர :
மஹதாம் யோகினாமேவ, யுஷ்மாகம் தத்வதாம்யஹம் !!
ஐச்வரியம் சௌர்யமாயுச்ச ததா கீர்த்தி : பிரதியஸி,
பிரபுத்வமார்ஜனீயம் வை யுஷ்மாபி :பௌளருஷாச்ரயை :
வடத்வீபமிதி க்யாதமுதக்பாகே க்ஷிதேர்மஹத்
த்தர கத்வா வீரயாகம் குருதேச்வர துஷ்டயே
அபேக்ஷிதானி த்ரவ்யாணி தானி தஸ்ய ததாம்யஹம்
தத்ர பிரஸன்னே கௌரீசே லப்யதாம் யன்மயோதிதம்
(மாயாதேவி தன் மைந்தர்களான சூரபத்மாதிகளுக்கு உபதேசிக்கின்றாள்.)

குழந்தைகளே ! தவம் புரிந்தவர்களுள் சிறந்தவரான தங்கள் தந்தை உங்களுக்குச் செய்த உபதேசம் மஹான்களான யோகிகளுக்கே தகுதியானது, உங்களுக்கேற்றதல்ல. (நீங்கள் தந்தை கூறியதைக் கேட்க வேண்டாம்) நான் கூறியதைக் கவனித்துக் கேளுங்கள், நிறைந்த செல்வம், பெரியவீரனாக இருத்தல், நீண்ட ஆயுள், எங்கும் பரவுயிருக்கிற புகழ், எல்லோருக்கும் தலைவனாக இருத்தல் இவைகளை நீங்கள் உங்கள் பௌளருஷத்தால் தேட வேண்டும். இம்மண்ணுலகில் வடதிசையில் வடத்வீபமென்றோரிடமிருக்கின்றது. அங்கு நீங்கள் சென்று சிவபெருமானைச் சந்தோஷப்படுத்த வீரயாகமென்ற ஓர் யாக கர்மத்தை செய்வீர்களாக, அதற்குரிய மந்திரதந்திரங்களுடன் திரவியங்களைத் தருகிறேன். யாகத்தை அனுஷ்டித்து சிவனை ஸந்தோஷப்படுத்தி ஸந்தோஷத்தை அடைந்த சிவனிடமிருந்து நான் கூறியவைகளைப் பெற்றுக்கொள்ளுங்கள்.

(இவ்வுலக ஸுகத்தைப் பெறுவதே மேலான நிலை - என்று உபதேசிக்கின்ற மாயாதேவியின் வாக்யம் ரஜோகுணபிரதானமானது).

## சுக்ராசாரியாரின் உபதேசம்

சங்-ஸம்-அஸுரகா 3 அத்

शुक्रस्तु शूरपद्मानमेकमेकान्तमानयत् ।
उवाच वाचा वाचालो हृष्टार्थानुविधायिनीं ॥
भग्ने घटे घटाकाशो महाकाशे प्रलीयते ।
तद्वद्देहविनाशेन जीवस्तु शिवतां गतः ।
तस्मात्पुण्यानि पापानि मिथ्यारूपाणि सत्यतः
मोक्षोप्येवं ततस्त्वं तु स्वात्मानं ब्रह्मरूपिणम्
मत्वा शोकं विमुञ्चाथ ब्रह्मविष्ण्वादिदेवताः
इन्द्रादिदेवतानां च भयमुत्पादयन्महत्
तेषां पदं प्रयच्छ त्वमसुराणां महौजसाम्
मारणं च तथा कामं परस्यापि च वञ्चनाम्
चौर्यं प्रद्वेषणं चैवमादीनि च तथा कुरु

சுக்ரஸ்து சூரபத்மான மேகமேகாந்தமானயத்
உவாச வாசா வாசாலோ திருஷ்டார்த்தானுவிதாயினீம்
பக்னேகடே கடாகாசோ மஹாகாசே பிரலீயதே
தத்வத் தேஹவினாசேன ஜீவஸ்து சிவதாம் கத :
தஸ்மாத் புண்யானி பாபானி மித்யாரூபாணி ஸத்யத :
மோக்ஷாப்யேவம் ததஸத்வம்து ஸ்வாத்மானம்
பிரம்ஹரூபிணம்
மத்வா சோகம் விமுஞ்சாத பிரஹ்ம விஷ்ண்வாதிதேவதா :
இந்திராதி தேவதானம் ச பயமுத்பாதயன்மஹத்
தேஷாம் பதம் பிரயச்சத்வமஸுராணாம் மஹௌஜஸாம்
மாரணம் சததா காமம் பரஸ்யாபி ச வஞ்சனாம்
சௌரியம் ப்ரத்வேஷணம் சைவ மாதீனி ச சதா குரு

(சூரபத்மனைத் தனியே அழைத்து சுக்கிராச்சாரியார் உபதேசித்தததாவது)

"எங்ஙனம் குடத்திற்குள்ளிலிருக்கும் "கட" ஆகாசமானது அக்குடம் உடைந்தபோது யாதொரு பிரயத்னமுமின்றி மஹாகாசத்தோடு கலந்துவிடுகின்றனவோ அங்ஙனமே, ஒரு ஜீவனுடைய சரீரத்திற்கு லயம் நேர்ந்தபோது ஜீவஸ்ரூபம் சிவத்தோடு சேர்ந்து விடுகிறது. இதுதான் மோக்ஷமென்பது. இதையடைவதற்கு யாதொரு ஸாதனமும் வேண்டியதில்லை. புண்ணியமென்பதும், பாவமென்பதும் உண்மையில் இல்லவே இல்லை. உண்டென்று கூறும் வார்த்தைகள் வெறும் பொய்யே, ஆதலின் ஹே சூரனே! நீ செய்யத்தக்கது யாதெனில், உன்னுடைய தேஹத்தையே பரப்பிரஹ்மமாக நினைத்துச் சோகத்தை அறவேவிட்டு, விஷ்ணு முதலியவர்களுக்கும் இந்திரன் முதலிய தேவர்களும் அஞ்சி நடுங்கும்படி திக்விஜயம் செய்து அவர்களது பதவிகளில் மஹா பராக்ரமசாலிகளான அஸுரர்களை ஸ்தாபித்து, எப்பொழுதும், கொலை, காதல், வஞ்சனை, திருட்டு, த்வேஷம் முதலியவற்றைச் செய்து கொண்டு ராஜ்யபாரம் செய்வாயாக.

(சூரபத்மனுக்கு சுக்ரர் உபதேசித்த "தேஹமே ஆத்மா" என்ற கொள்கை வீரேசன மதமெனப்படும்,-சுக்ரோபதேசம் தமோகுண பிரதானம்)

## சங்கரபகவத்பாதாளியற்றிய
## ஸுப்ரிம்ஹண்ய புஜங்கஸ்தோத்திரம்

(१) सदा बालरूपापि विघ्नाद्रिहन्त्री
महादन्तिवक्त्रापि पञ्चास्यमान्या ।
विधीन्द्रादिमृग्या गणेशाभिधा मे
विधत्तां श्रियं कापि कल्याणमूर्तिः ॥

ஸதா பாலரூபாபி விக்னாத்ரிஹந்த்ரீ
மஹா தந்திவக்த்ராபி பஞ்சாஸ்யமான்யா
விதீந்த்ராதிம்ருக்யா கணேஸாபிதாமே
விதத்தாம் ஸ்ரியம் காபிகல்யாணமூர்த்தி :

எப்போதும் குழந்தையின் உருவமாக இருந்தாலும் இடையூறுகளாகிற மலையை பிளக்கிறதும், பெரும்யானை முகத்துடனிருந்த போதிலும் சிங்கத்தினால் (ஸ்ரீபரமசிவனால்) கௌரவிக்கத்தக்கதும், பிரம்மா, இந்திரன் முதலியோரால் தேடத்தக்கதும், இந்த விதமென்று கூறமுடியாததும், ஸ்ரீ கணேசன் எனப்பெயர் படைத்ததுமான கல்யாண மூர்த்தியானது எனக்கு ஸம்பத்தைக் கொடுக்கட்டும்.

(२) न जानामि शब्दं न जानामि चार्थं
न जानामि पद्यं न जानामि गद्यम् ।
चिदेका षडास्या हृदि द्योतते मे
मुखान्निस्सरन्ते गिरश्चापि चित्रम् ॥

ந ஜானாமி சப்தம் ந ஜானாமி சார்த்தம்
ந ஜானாமி பத்யம் ந ஜானாமி கத்யம்
சிதேகா ஷடாஸ்யா ஹ்ருதி த்யோததே மே
முகாந்நிஸ்ஸ்ரந்தே கிரஸ்சாபி சித்ரம் :

நான் சப்தமறியேன், அதன் பொருளையுமறியேன், ஆனால் ஆறுமுகங்களுடன் விளங்கும் ஒரு ஞான ஒளி ஹ்ருதயத்தில் தோன்றுகிறது. வாக்கினின்று சப்தங்கள் வெளிவருகின்றன. இது ஆச்சர்யம்

(३) मयूराधिरूढं महावाक्यगूढं
मनोहारिदेहं महच्चित्तगेहम् ।
महीदेवदेवं महावेदभावं
महादेवबालं भजे लोकपालम् ॥

மயூராதிருடம் மஹாவாக்யகூடம்
மனோஹாரிதேஹம் மஹச்சித்தகேஹம்
மஹீதேவ தேவம் மஹாவேதபாவம்
மஹாதேவபாலம் பஜே லோகபாலம் :

மயில்வாகனத்தில் ஏறியவரும், மஹாவாக்யத்தின் உட்பொருள் ஆனவரும், மனதைக்கவரும். அழகு வாய்ந்த தேகமுள்ளவரும், மஹான்களின் மனதை வீடாகக் கொண்டவரும், பூதேவர்களான வேதவித்துக்களால் உபாஸிக்கப்படுகிறவரும் உபநிஷத்துக்களின் பொருளும், பரமசிவனின் புதல்வனும், உலகங்களை காப்பவருமான தங்களை பூஜிக்கின்றேன்.

(இங்கு நிராகார மூர்த்தியை ஸாகரமாயத் தரிசனம் கொடுக்கும் படி வேண்டியதாகக் கருத்து)

(४) यदा सन्निधानं गता मानवा मे
भवाम्भोधिपारं गतास्ते तदैव ।
इति व्यञ्जयन्सिन्धुतीरे य आस्ते
तमीडे पवित्रं पराशक्तिपुत्रम् ॥

யதா ஸந்நிதானம் கதா மானவா மே
பவாம்போதி பாரம் கதாஸ்தே ததைவ
இதி வ்யஞ்ஜயன் ஸிந்துதீரே ய ஆஸ்தே
தமீடே பவித்ரம் பராஸக்திபுத்ரம்

ஸ்ரீஸ்கந்தன் கடல்கரையில் வசிப்பதன் காரணத்தை இதனால் கூறுகிறார். எப்பொழுது மனிதர்கள் என் ஸந்நிதியை அடைகிறார்களோ, அப்பொழுதே ஸம்ஸாரக் கடலின் கரையை அடைந்து விடுகிறார்கள் என்று காட்டுவது போல் ஸமுத்ரக் கரையில் எந்த முருகன் வஸிக்கின்றானோ, அப்படிப்பட்ட பக்தர்களின் பாவத்தைப் போக்குகின்றவரும் ஸ்ரீ பராசக்தியின் புத்திரனுமான ஸ்ரீ ஸ்கந்தனை துதிக்கின்றேன்.

(५) यथाब्धेस्तरङ्गा लयं यान्ति तुङ्गा-
स्तथैवापदस्सन्निधौ सेवतां मे ।
इतीवोर्मिपङ्क्तीर्नृणां दर्शयन्तं
सदा भावये हृत्सरोजे गुहं तम् ॥

யதாப்தேஸ்தரங்கா லயம் யாந்தி துங்கா-
ததைவாபத :ஸந்நிதௌ ஸேவதாம் மே !
இதிவோர்மிபங்க்தீர்ந்ருணாம் தர்ஸயந்தம்
ஸதா பாவயே ஹ்ருத்ஸரோஜே குஹம் தம் !!

எப்படி ஸமுத்திரத்தின் பெரிதான அலைகள் என் கோயில் வாசல் வந்ததும், அழிந்து விடுகின்றனவோ, அதைப்போல் பக்தர்களின் பெரியதான ஆபத்துக்களும் என் கோயில் வாசல் வந்ததும் அழிந்து விடும் என்பதை மனிதர்களுக்கு அலைகளைக் காட்டுவதின் மூலம் உபதேசிக்கின்ற ஸ்ரீ முருகனை எப்பொழுதும் ஹ்ருதய கமலத்தில் த்யானம் செய்கின்றேன்.

(६) गिरौ मन्निवासे नरा येऽधिरूढा
तदा पर्वते राजते तेऽधिरूढाः ।
इतीव ब्रुवन्गन्धशैलाधिरूढः
स देवो मुदे मे सदा षण्मुखोऽस्तु ॥

கிரௌ மந்நிவாஸே நரா யேதிரூடா :
ததா பர்வதே ராஜதே தேதிரூடா :
இதீவ ப்ருவன் கந்தசைலா திரூட :
ஸ தேவோ முதே மே ஸதா ஷண்முகோஸ்து !!

எப்பொழுது மனிதர்கள் நான் இருக்கும் மலையில் ஏறிவருகின்றனரோ, அப்போதே கைலாஸ பர்வதத்தில் ஏறிவிடுகிறார்கள் என்று சொல்லுபவர் போல கந்தமாதன பர்வதத்தில் அமர்ந்திருக்கும் அந்த தேவனான ஆறுமுகக்கடவுள் எனக்கு ஆனந்தத்தை கொடுப்பவராக இருக்கட்டும்.

(௭) महाम्भोधितीरे महापापचोरे
मुनीन्द्रानुकूले सुगन्धाख्यशैले ।
गुहायां वसन्तं स्वभासा लसन्तं
जनार्तिं हरन्तं श्रयामो गुहं तम् ॥

மஹாம்போதி தீரே மஹாபாப சோரே
முனீந்த்ரானுகூலே ஸுகந்தாக்யசைலே ।
குஹாயாம் வஸந்தம் ஸ்வபாஸாலஸந்தம்
ஜனார்த்திம் ஹரந்தம் ஸ்ரயாமோ குஹம் தம் ॥

மஹாபாவங்களைக் போக்குகின்றதும் பெரிய கடற்கரைலிருக்கின்றதும், முனிவர்களின் தபஸ்ஸுக்கு ஏற்றதாயுமுள்ள ஸுகந்தம் என்ற மலையில், குகையில் வஸிப்பவரும், தனது காந்தியால் ப்ரகாசிப்பவரும் ஜனங்களின் மனக்கவலையைப் போக்குகின்றவருமான அந்த குஹனை ஆச்ரயிக்கிறோம்.

(८) लसत्स्वर्णगेहे नृणां कामदोहे
सुमस्तोमसञ्छन्नमाणिक्यमञ्चे ।
समुद्यत्सहस्रार्कतुल्यप्रकाशं
सदा भावये कार्तिकेयं सुरेशम् ॥

லஸத்ஸ்ர்ணகேஹே ந்ருணாம் காமதோஹே
ஸுமஸ்தோம ஸஞ்சன்ன மாணிக்ய மஞ்சே ।
ஸமுத்யத்ஸஹஸ்ரார்கதுல்யப்ரகாசம்
ஸதா பாவயே கார்த்திகேயம் ஸுரேசம் ॥

மனிதர்களின் கோரிய பொருளைக் கொடுக்கும், ஒளி வீசுகின்ற தங்கமயமான கோவிலில் புஷ்பக்குவியலால் பரப்பப்பட்ட மாணிக்கமயமான கட்டிலில், நன்கு உதயமாகின்ற ஆயிரக்கணக்கான ஸூர்யர்களுக்கு ஒப்பான காந்தியை உடையவரும், தேவர்களுக்கு ஈசனுமான கார்த்திகேயனை (கிருத்திகா தேவிகளின் புதல்வனை) எப்போதும் த்யானம் செய்கிறேன்:

(९) रणद्धंसके मञ्जुलेऽत्यन्तशोणे
मनोहारिलावण्यपीयूषपूर्णे ।
मनष्षट्पदो मे भवक्लेशतप्तः
सदा मोदतां स्कन्द ते पादपद्मे ॥

ரணத்தம்ஸகே மஞ்சுளேத்யந்தஸோணே
மனோஹாரிலாவண்ய பீயூஷபூர்ணே
மனஷ்ஷட்பதோமே பவக்லேசதப்த :
ஸதாமோததாம் ஸ்கந்த தே பாதபத்மே

சப்திக்கின்ற பாதஸரத்தை உடையதும், அழகு வாய்ந்ததும், மிகச்சிவந்ததும், மனதைக்கவரும் அழகாகிற அமிருதத்தினால் நிரம்பியதுமான தங்களுடைய சரணகமலத்தில், ஸம்ஸாரதாபத்தால் தவிக்கும் எனது மனமாகிற வண்டானது எப்போதும் ரமிக்கட்டும்.

(१०) सुवर्णाभदिव्याम्बरैर्भासमानां
क्वणत्किङ्किणीमेखलाशोभमानाम् ।
लसद्धेमपट्टेन विद्योतमानां
कटिं भावये स्कन्द ते दीप्यमानाम् ॥

ஸுவர்ணாப திவ்யாம்பரைர்பாஸமானாம்
க்வணத்கிங்கிணீ மேகலா சோபமானாம் !
லஸத்தேமபட்டேன வித்யோதமானாம்
கடிம் பாவயே ஸ்கந்த தே தீப்யமானாம் !!

ஹே ஸ்கந்தபிரபோ, ஸ்வரணத்தின் காந்தி படைத்த, தேவர்கள் அணியக்கூடிய (சிறந்த) வஸ்த்ரங்களால் ப்ரகாசிப்பதும், சப்திக்கின்ற சலங்கைகளை உடைய ஒட்டியாணத்தால் ப்ரகாசிப்பதும், ப்ரகாசிக்கும் தங்கப்பட்டத்தால் விளங்குகின்றதும் ப்ரகாசிக்கின்றதுமான தங்களுடைய, இடுப்பை த்யானம் செய்கிறேன்.

(११) पुलिन्देशकन्याघनाभोगतुङ्ग-
स्तनालिङ्गनासक्तकाश्मीररागम् ।
नमस्याम्यहं तारकारे तवोरः-
स्वभक्तावने सर्वदा सानुरागम् ॥

புளிந்தேஸகன்யாகநாபோகதுங்க
ஸ்தனாலிங்கநாஸக்தகாஸ்மீர ராகம்
நமஸ்யாம்யஹம் தாரகாரே தவோர :
ஸ்வபக்தாவனே ஸர்வதா ஸானுராகம் :

தாரகாஸுரனைஸம்ஹரித்த ப்ரபோ, வேடராஜனின் பெண்ணான வள்ளி தேவியின் பெருத்ததும், விரிந்ததும், உயர்ந்ததுமான ஸ்தனங்களின் ஆலிங்கனத்தால் ஸம்பந்தப்பட்ட குங்குமப்பூவால் சிவந்ததும் தனது பக்தர்களைக் காப்பதில் எப்பொழுதும் ஆசையோடு கூடியதுமான தங்களுடைய மார்பை நான் வணங்குகிறேன்.

(१२) विधौ क्लृप्तदण्डान् स्वलीलाधृताण्डान्
निरस्तेभशुण्डान् द्विषत्कालदण्डान् ।
हतेन्द्रारिषण्डान् जगत्त्राणशौण्डान्
सदा ते प्रचण्डान् श्रये बाहुदण्डान् ॥

விதௌ க்லுப்த தண்டான்ஸ்வலீலாத்ருதாண்டான்
நிரஸ்தே பசுண்டான் த்விஷத்காலதண்டான் !
ஹதேந்திராரி ஷண்டான் ஜகத் த்ராண சௌண்டான்
ஸதா தே-ப்ரசண்டான் ஸ்ரயே பாஹுதண்டான் !!

ப்ரம்மதேவனை சிக்ஷித்தவைகளும் தனது விளையாட்டால் (விளையாட்டாகவே) தரிக்கப்பட்ட ப்ரம்மாண்டங்களை உடையவைகளும், யானைத் துதிக்கைகளைத் தோற்கடித்தவைகளும் (பருத்தவைகளும்) சத்ருக்களுக்கு யமதண்டம் போன்றவைகளும், அஸுரக்கூட்டத்தைக் கொன்றவைகளும், உலகைக் காப்பதில் திறமை வாய்ந்தவைகளும், மஹத்தான சக்தி வாய்ந்தவைகளுமான, தங்களுடைய தண்டம், போன்ற (நீண்ட) கைகளை எப்பொழுதும் ஆச்ரயிக்கிறேன்.

(१३) सदा शारदाः षण्मृगाङ्का यदि स्युः
समुद्यन्त एव स्थिताश्चेत्समन्तात् ।

सदा पूर्णबिम्बाः कलङ्कैश्च हीना-
स्तदा त्वन्मुखानां ब्रुवे स्कन्द साम्यम् ॥

ஸதா சாரதா : ஷண்மிருகாங்கா யதி ஸ்யு
ஸ்ஸமுத்யந்த ஏவ, ஸ்திதாச்சேத்ஸமந்தாத் !
ஸதா பூர்ணபிம்பா : கலங்கைஸ்ச ஹீனா
ததா த்வன் முகானாம் ப்ருவேஸ்கந்த ஸாம்யம் :

ஹே ஸ்கந்தனே, ஆறுசரத்கால சந்திரமண்டலங்கள் எப்பொழுதும் எங்கும் உதித்துக்கொண்டு இருப்பவைகளாகவும் எப்பொழுதும் பூர்ண பிம்பங்களாகவும், களங்கமற்றவைகளாகவும் இருக்குமானால், அப்பொழுது அவைகளை தங்களுடைய முகங்களுக்கு உபமானமாகச் சொல்லுவேன். (அதாவது ஸ்ரீ ஸ்கந்தனது முகங்கள், களங்கமற்ற ஆறு சரத்கால பூர்ணசந்திர மண்டலங்கள் போல் பிரகாசிக்கின்றன என்பது கருத்து)

(१४) स्फुरन्मन्दहासैस्सहंसानि चञ्चत्
कटाक्षावलीभृङ्गसङ्घोज्ज्वलानि ।
सुधास्यन्दिबिम्बाधराणीशसूनो
तवालोकये षण्मुखाम्भोरुहाणि ॥

ஸ்புரன்மந்தஹாஸைஸ்ஸஹம்ஸானி சஞ்சத்
கடாக்ஷாவளீப்ருங்க ஹங்கோஜ்ஜ்வலானி !
ஸுதாஸ்யந்தி பிம்பாதராணீச ஸூனோ
தவாலோகயே ஷண்முகாம்போருஹாணி !!

ஹேசிவபுத்ரா, ப்ரகாசிக்கின்ற புன்சிரிப்புகளால் அன்னங்களோடு கூடியவைகளும், சஞ்சலமான கடாக்ஷங்களின் கூட்டங்களால் கருவண்டுக்கூட்டத்தோடு கூடியவைகளும், அமிருதத்தைப் பொழிகின்ற கோவைப்பழம் போன்ற உதட்டை உடையவைகளுமான தங்களுடைய ஆறு முகா ரவிந்தரங்களை நான் காண்கிறேன்.

(१५) विशालेषु कर्णान्तदीर्घेष्वजस्रं
दयास्यन्दिषु द्वादशस्वीक्षणेषु ।
मयीषत्कटाक्षः सकृत्पातितश्चेद्
भवेत्ते दयाशील का नाम हानिः ॥

விசாலேஷு கர்ணாந்த தீர்க்கேஷ்வஜஸ்ரம்
தயாஸ்யந்திஷு த்வாதசஸ்வீக்ஷணேஷு !
மயீதஷ்கடாக்ஷ ஸக்ருத் பாதிதச்சேத்
பவேத் தே தயாசில கா நாம ஹானி : ||

ஹே தயாசில ! அகன்றவைகளும் காதுவரை நீண்டவைகளும், எப்பொழுதும் கருணைப்பெருக்குடன் கூடியவைகளுமான தங்களுடைய பன்னிரண்டு கண்களில் ஒரு கண்ணின் கடைக்கண் பார்வை ஒருமுறை கொஞ்சம் என்மேல் பட்டால் தங்களுக்கு என்ன நஷ்டம்?

(१६) सुताङ्गोद्भवो मेऽसि जीवेति षड्धा
जपन्मन्त्रमीशो मुदा जिघ्रते यान् ।
जगद्भारभृद्भ्यो जगन्नाथ तेभ्यः
किरीटोज्ज्वलेभ्यो नमो मस्तकेभ्यः ॥

ஸுதாங்கோத்பவோ மேஸி ஜீவேதிஷோடா
ஜபன்மந்த்ரமீசோ முதா ஜிக்ரதே யான் !
ஜகத்பாரப்ருத்ப்யோ ஜகந்நாத தேப்ய :
கிரீடோஜ்ஜ்வலேப்யோ நமோ மஸ்தகேப்ய : ||

ஹே புத்ர, எனது அங்கத்திலிருந்து நீ உண்டானாய், நீண்ட காலம் ஜீவித்திரு, என்ற மந்திரத்தை ஆறு முறை ஜபம் செய்து கொண்டு பரமசிவன் சந்தோஷத்துடன் எந்த தலைகளில் முகர்ந்து பார்க்கிறாரோ, அப்படிப்பட்டவைகளும், உலகத்தைக் காக்கின்றவைகளும், கிரீடங்களால் ப்ரகாசிக்கின்றவைகளுமான தங்கள் தலைகளுக்கு ஓ! ஜெகன்னாத ! நமஸ்காரம்.

(१७) स्फुरद्रत्नकेयूरहाराभिराम-
श्चलत्कुण्डलश्रीलसद्गण्डभागः । कटौ पीतवासाः करे चारुशक्तिः
पुरस्तान्ममास्तां पुरारेस्तनूजः ॥

ஸ்புரத்ரத்ன கேயூரஹாராபிராம
சலத்குண்டல ஶ்ரீலஸத்கண்டபாக : |
கடௌ பீதவாஸா : கரே சாரு சக்தி :
புரஸ்தான்மமாஸ்தாம் புராரே ஸ்தனூஜ : ||

திரிபுரஸம்ஹாரம் செய்த பரமேச்வரனின் புத்ரன் ப்ரகாசிக்கின்ற ரத்னமயமான தோள்வளை, முக்தாஹாரம் இவற்றால், அழகுவாய்ந்தவனாகவும், அசைகின்ற குண்டலங்களின் காந்தியால் பிரகாசிக்கின்ற கன்னப்பிரதேசங்களை உடையவனாகவும், இடுப்பில் பீதாம்பரத்தை தரித்தவனாகவும், கையில் அழகிய வேலைப்பிடித்தவனாகவும் என் முன்னிலையில் காக்ஷியளிக்க வேண்டும். (இங்கு இம்மாதிரி ஶ்ரீ ஆசாரியாள் கோரியதும் ஶ்ரீ முருகப்பெருமான் அவ்விதமே காக்ஷியளித்தார் என்று பெரியோர்கள் கூறுகின்றனர்.)

(१८) इहायाहि वत्सेति हस्तान् प्रसार्या-
ह्वयत्यादराच्छङ्करे मातुरङ्कात् ।
समुत्पत्य तातं श्रयन्तं कुमारं
हराश्लिष्टगात्रं भजे बालमूर्तिम् ॥

இஹாயாஹி வத்ஸேதி ஹஸ்தான் ப்ரஸார்யா
ஹ்வயத்யாதரா ச் சங்கரே மாதுரங்காத்
ஸமுத்பத்ய தாதம் ச்ரயந்தம் குமாரம்
ஹராஸ்லிஷ்டகாத்ரம் பஜே பால மூர்த்திம் ||

ஶ்ரீ பரமசிவன், கைகளை விரித்து ஹே குழந்தாய் ! இங்கே வா, என்று அன்புடன் அழைக்கையில் தாயின் மடியிலிருந்து துள்ளி ஓடிவந்து தகப்பனாரை அடைந்தவரும், குழந்தை

உருவமுள்ளவரும் பரமசிவனால் அணைக்கப்பட்ட சரீரத்தை உடையவருமான முருகனை பூஜிக்கின்றேன். இம்மாதிரியே ஸ்ரீ முருகன் ஸ்ரீ ஆசாரியாருக்கு தரிசனம் அளித்ததாகக் கருத்து.

(१९) कुमारेशसूनो गुह स्कन्द सेना-
पते शक्तिपाणे मयूराधिरूढ ।
पुलिन्दात्मजाकान्त भक्तार्तिहारिन्
प्रभो तारकारे सदा रक्ष मां त्वम् ॥

குமாரேசஸூனோ குஹஸ்கந்தஸேனா
பதே சக்திபாணே மயூராதிரூட!
புளிந்தாத்மஜாகாந்த பக்தார்த்திஹாரின்
ப்ரபோ தாரகாரே ஸதா ரக்ஷ மாம் த்வம் !!

ஹே குமார, ஹே ஈசபுத்ர, ஹே குஹ, ஹே ஸேனாபதே, வேல் தரித்தவனே, மயில் மேலிருப்பவனே, வள்ளியின் நாயகனே, பக்தர்களின் கவலையைப் போக்குகின்றவனே, பிரபுவே, தாரகனைக் கொன்றவனே, எப்பொழுதும் என்னை ரக்ஷிக்க வேண்டும்.

(२०) प्रशान्तेन्द्रिये नष्टसंज्ञे विचेष्टे
कफोद्गारिवक्त्रे भयोत्कम्पिगात्रे ।
प्रयाणोन्मुखे मय्यनाथे तदानीं
द्रुतं मे दयालो भवाग्रे गुह त्वं ॥

ப்ரசாந்தேந்த்ரியே நஷ்ட ஸம்க்ஞே விசேஷ்டே
கபோத்காரிவக்த்ரே பயோத்கம்பிகாத்ரே !
ப்ரயாணோன்முகே மய்யநாதே ததானீம்
த்ருதம் மே தயாளோ பவாக்ரே குஹ த்வம் !!

ஹே தயைமிக்கவரே ! நான் கதியற்றவனாய், கண் முதலிய இந்திரியங்கள் ஒடுங்கி நினைவற்றவனாகவும், அசைவற்றவனாகவும், வாயிலிருந்து கபத்தைக் கக்குகின்றவனாகவும்

பயத்தால் நடுங்குகின்ற சரீரத்தை உடையவனாகவும் இருந்து கொண்டு உயிரைவிடும்பொழுது ஹே குஹ, அப்பொழுது என் முன்னிலையில் சீக்கிரமாக வர வேண்டும்.

(२१) कृतान्तस्य दूतेषु चण्डेषु कोपा-
द्दह छिन्धि भिन्धीति मां तर्जयत्सु ।
मयूरं समारुह्य मा भैरिति त्वं
पुरश्शक्तिपाणिर्ममायाहि शीघ्रम् ॥

க்ருதாந்தஸ்ய தூதேஷு சண்டேஷு கோபாத்
த ஹச்சிந்தி பிந்தீதி மாம் தர் ஜயத்ஸு
மயூரம் ஸமாருஹ்ய மா பைரிதி த்வம்
புர : சக்திபாணிர்மமாயாஹி சீக்ரம் ॥

பயங்கரர்களான யமதூதர்கள் கோபத்தால் பொசுக்கு, வெட்டு, பிள, என்று என்னை அதட்டும்போது, தாங்கள் மயில்மீதேறிக்கொண்டு வேலாயுதத்துடன், பயப்படாதே என்று சொல்லிக்கொண்டு என் முன்னிலையில் சீக்கிரம் வர வேண்டும்.

(२२) प्रणम्यासकृत्पादयोस्ते पतित्वा
प्रसाद्य प्रभो प्रार्थयेऽनेकवारम् ।
न वक्तुं क्षमोऽहं तदानीं कृपाब्धे
न कार्यान्तकाले मनागप्युपेक्षा ॥

ப்ரணம்யாஸக்ருத் பாதயோஸ்தே பதித்வா
ப்ரஸாத்ய ப்ரபோ ப்ரார்த்தயே னேகவாரம்
ந வக்தும் க்ஷமோஹம் ததானீம் க்ருபாப்தே
ந கார்யாந்தகாலே மனாகப்யுபேக்ஷா ॥

ஹே ப்ரபோ, தங்கள் கால்களில் பலமுறை விழுந்து நமஸ்கரித்து மன்னிப்புக்கேட்டு பலமுறை ப்ரார்த்திக்கின்றேன். ஹே கருணைக்கடலே, அப்பொழுது எனக்குப் பேச முடியாது.

மரணத்தருவாயில் தாங்கள் கொஞ்சமும் என்னை அலக்ஷ்யம் செய்யக்கூடாது.

(२३) सहस्राण्डभोक्ता त्वया शूरनामा
हतस्तारकस्सिंहवक्त्रश्च दैत्यः ।
ममान्तर्हृदिस्थं मनः क्लेशमेकं
न हंसि प्रभो किंकरोमि क्व यामि ॥

ஸஹஸ்ராண்டபோக்தா த்வயா சூரநாமா
ஹதஸ்தாரக :ஸிம்ஹவக்த்ரஸச தைத்ய : ।
மமாந்தர் ஹ்ருதிஸ்தம் மனக்லேஸமேகம்
ந ஹம்ஸி ப்ரபோ கிம் கரோமி க்வயாமி ॥

ஹே பிரபோ, ஆயிரம் ப்ரம்மாண்டத்தை ஆண்ட சூரபத்மன், தாரகன், ஸிம்ஹவக்த்ரன் என்ற அஸுரர்கள் தங்களால் கொல்லப்பட்டார்கள். எனது ஹ்ருதயத்திலிருக்கும் மனக்கவலையை மட்டும் கொல்லவில்லையே? நான் என்ன செய்வேன்? எங்கே போவேன்?

(२४) अहं सर्वदा दुःखभारावसन्नो
भवान् दीनबन्धुस्त्वदन्यं न याचे ।
भवद्भक्तिरोधं सदा क्लृप्तबाधं
ममाधिं द्रुतं नाशयोमासुत त्वम् ॥

அஹம் ஸர்வதா துக்கபாராவஸந்நோ
பவான் தீனபந்துஸ்த்வதன்யம் ந யாசே
பவத்பக்திரோதம் ஸதா க்லுப்தபாதம்
மமாதிம் த்ருதம் நாசயோமாஸுத த்வம் ॥

ஹே பார்வதீபுத்ர, நான் எப்பொழுதும் துக்கச்சுமையால் பீடிக்கப்பட்டவன், தாங்களோ தீனபந்து, தங்களைத் தவிர பிறரிடம் யாசிக்கமாட்டேன். தாங்கள் தங்கள் பக்திக்கு இடையூறு செய்கின்றதும், எப்பொழுதும் தொந்திரவு கொடுக்கின்றதுமான என் மனக்கவலையை நீர் நாசம் செய்ய வேண்டும்.

(२५) अपस्मारकुष्ठक्षयार्शःप्रमेह-
ज्वरोन्मादगुल्मादिरोगा महान्तः ।
पिशाचाश्च सर्वे भवत्पत्रभूतिं
विलोक्य क्षणात्तारकारेद्रवन्ते ॥

அபஸ்மாரகுஷ்ட க்ஷயார்ச :ப்ரமேஹ
ஜ்வரோன் மாதகுல்மாதிரோகா மஹாந்த : !
பிசா சாச்ச ஸர்வே பவத்பத்ரபூதிம்
விலோக்ய க்ஷணாத் தாரகாரே த்ரவந்தே !!

தாரகனைக் கொன்றவரே, காக்கைவலி, குஷ்டம், க்ஷயம், மூலம், மூத்ரரோகம், ஜ்வரம், பைத்தியம், வயிற்றுவலி முதலிய மஹாரோகங்களும், எல்லா பிசாசங்களும், தங்கள் சரணத்தில் வைத்துக் கொடுக்கப்படும் பன்னீர் இலை விபூதியைக் கண்டு பயந்து ஓடுகின்றன.

(२६) दृशि स्कन्दमूर्तिःश्रुतौ स्कन्दकीर्ति-
र्मुखे मे पवित्रं सदा तच्चरित्रम् ।
करे तस्य कृत्यं वपुस्तस्य भृत्यं
गुहे सन्तु लीना ममाशेषभावाः ॥

த்ருஶி ஸ்கந்தமூர்த்தி : ஸ்ருதௌ ஸ்கந்த கீர்த்தி :
முகே மே பவித்ரம் ஸதா தச் சரித்திரம் !
கரே தஸ்ய க்ருத்யம் வபுஸ்தஸ்ய ப்ருத்யம்
குஹே ஸந்து லீனா மமாஸேஷபாவா : !!

எனது கண்ணில் ஸ்கந்தனின் மூர்த்தியும் காதில் ஸ்கந்தனின் கீர்த்தியும், முகத்தில் எப்போதும் பாவனமான அவன் சரித்ரமும், கையில் அவனுடைய அர்ச்சனையும். சரீரத்தில்

அவனுக்கு பணிவிடை செய்தலும் இருக்கட்டும். எனது எல்லா கருத்துக்களும் குஹனிடத்தில் லயத்தை அடைந்து விடட்டும்.

(२७) मुनीनामुताहो नृणां भक्तिभाजा-
ममीष्टप्रदास्सन्ति सर्वत्र देवाः ।
नृणामन्त्यजानामपि स्वार्थदाने
गुहाद्दैवमन्यन्न जाने जाने ॥

முனீனாமுதாஹோ ந்ருணாம் பக்திபாஜா-
மபீஷ்டப்ரதா : ஸந்தி ஸர்வத்ர தேவா : ।
ந்ருணாமந்த்யஜானாமபி ஸ்வார்த்ததானே
குஹாத்தைவமன்யம் ந ஜானே ந ஜானே ॥

தேவர்கள் எங்கும் மகரிஷிகளுக்கோ பக்தி படைத்த மனிதர்களுக்கோ, கோரிய பொருளைக் கொடுக்கின்றவர்களாக இருக்கின்றனர். சண்டாளர்களுக்கும் கூட கோரிய பொருளைக் கொடுப்பதில் குஹனைத் தவிர வேறு தெய்வத்தை நான் அறியவே இல்லை.

( ८) कलत्रं सुता बन्धुवर्गः पशुर्वा
नरो वाथ नारी गृहे ये मदीयाः ।
यजन्तो नमन्तस्स्तुवन्तो भवन्तं
स्मरन्तश्च ते सन्तु सर्वे कुमार ॥

களத்ரம் ஸுதா பந்துவர்க : பஸுர்வா
நரோ வாத நாரீ க்ருஹே யே மதீயா : ।
யஜந்தோ நமந்த : ஸ்துவந்தோ பவந்தம்
ஸ்மரந்தஸ்சதே ஸந்து ஸர்வே குமார :

ஹே குமார ! என் வீட்டிலுள்ள பத்னி, புத்ரர்கள், பந்துக்கள், பசுக்கள், மற்றுமுள்ள ஸ்த்ரீ, புருஷர்கள் எல்லோரும் தங்களைப் பூஜிக்கின்றவர்களாகவும், நமஸ்கரிக்கின்றவர்களாகவும்,

ஸ்தோத்திரம் செய்கின்றவர்ளாகவும், தியானிக்கின்றவர்களாவும் இருக்க வேண்டும்.

(१९) मृगाः पक्षिणो दंशका ये च दुष्टा-
स्तथा व्याधयो बाधका ये मदङ्गे ।
भवच्छक्तितीक्ष्णाग्रभिन्नाः सुदूरे
विनश्यन्तु ते चूर्णितक्रौञ्चशैल ॥

ம்ருகா : பக்ஷிணோ தம்சகா யே ச துஷ்டா
ததா வ்யாதயோ பாதகா யே மதங்கே !
பவச்சக்தி தீக்ஷ்ணாக்ரபின்னாஸ்ஸுதூரே
விநஸ்யந்து தே சூர்ணிதக்ரௌஞ்சசைல !!

க்ரௌஞ்ச மலையை பொடியாகச் செய்த ஓ ஸ்கந்த, பொல்லாத மிருகங்கள், பக்ஷிகள், ஈக்கள், அவ்விதமே எனது சரீரத்தில் பாதித்துக் கொண்டிருக்கும் கொடிய வியாதிகள் இவைகளெல்லாம் தங்களது சக்தியின் கூர்மையான நுனியால் குத்தப்பட்டு வெகுதூரத்திற்கு அப்பால் போய் நாசத்தையடைய வேண்டும்.

(२०) जनित्री पिता च स्वपुत्रापराधं
सहेते न किं देवसेनाधिनाथ ।
अहं चातिबालो भवान् लोकतातः
क्षमस्वापराधं समस्तं महेश ॥

ஜநித்ரீ பிதா ச ஸ்வபுத்ராபராதம்
சஹேதே ந கிம் தேவஸேனாதிநாத !
அஹம்சாதி பாலோ பவான் லோகதாத :
க்ஷமஸ்வாபராதம் ஸமஸ்தம் மஹேஸ !!

ஹே தேவஸேனாபதே ! தாயும் தகப்பனும் தனது குழந்தைகள் செய்யும் குற்றத்தை ஸஹித்துக்கொள்ளவில்லையா? நானோ மிகச்சிறிய குழந்தை. தாங்களோ உலகத்திற்கெல்லாம் பிதா.

மிகச்சிறந்த தெய்வமாகிய ஓ முருகா ! எல்லா குற்றங்களையும் பொறுத்துக் கொண்டு அனுக்கிரஹிக்க வேண்டும்.

(३१) नमः केकिने शक्तये चापि तुभ्यं
नमश्छाग तुभ्यं नमः कुक्कुटाय ।
नमस्सिन्धवे सिन्धुदेशाय तुभ्यं
पुनस्स्कन्दमूर्ते नमस्ते नमोस्तु ॥

நம : கேகினே சக்தயே சாபி துப்யம்
நமஸ்சாக துப்யம் நம : குக்குடாய !
நம : ஸிந்தவே ஸிந்துதேசாய துப்யம்
புன ஸ்கந்தமூர்த்தே நமஸ்தே நமோஸ்து !!

ஓ ஸ்கந்தனின் வாஹனமாகிய மயிலே உனக்கு நமஸ்காரம். ஆயுதமாகிய வேலே உனக்கு நமஸ்காரம். ஒரு ஸமயம் வாஹனமாகிய ஆடே, உனக்கு ஒரு நமஸ்காரம் கொடியாக விளங்கும் கோழியே, உனக்கு நமஸ்காரம், ஸமுத்ரமே, உனக்கு நமஸ்காரம், ஸமுத்ரக் கரையே நமஸ்காரம், ஓ ஸ்கந்த மூர்த்தியே, தங்களுக்கும் பல நமஸ்காரங்கள்,

(३२) जयानन्दभूमन् जयापारधामन्
जयामोघकीर्ते जयानन्दमूर्ते ।
जयानन्दसिन्धो जयाशेषबन्धो
जय त्वं सदा मुक्तिदानेशसूनो ॥

ஜயானந்தபூமன் ஜயாபாரதாமன்
ஜயாமோக கீர்த்தே ஜயானந்த மூர்த்தே !
ஜயானந்தஸிந்தோ ஜயாசேஷபந்தோ
ஜய த்வம் ஸதா முக்திதானேசஸூனோ !!

ஓ ஆனந்தத்திற்கு இருப்பிடமானவரே, தாங்கள் விளங்க வேண்டும் அளவற்ற காந்தி உடையவரே, தாங்கள் விளங்க வேண்டும் அமோகமான (பலனைக் கொடுக்கும்) சரித்ரத்தை

உடையவரே தாங்கள் விளங்க வேண்டும். ஆனந்தத்தைக் கொடுக்கும் உருவம் உடையவரே தாங்கள் விளங்க வேண்டும். ஓ ஆனந்தகடலே, தாங்கள் விளங்க வேண்டும் எல்லோருக்கும் பந்துவே, தாங்கள் விளங்க வேண்டும் ஓ முக்தியளிக்கும் ஈசபுத்ர, தாங்கள் எப்பொழுதும் விளங்க வேண்டும்.

(३३) भुजङ्गाख्यवृत्तेन क्लृप्तं स्तवं यः
पठेद्भक्तियुक्तो गुहं संप्रणम्य ।
स पुत्रान् कलत्रं धनं दीर्घमायु-
र्लभेत् स्कन्दसायुज्यमन्ते नरस्सः ॥

புஜங்காக்யவ்ருத்தேன க்லுப்தம் ஸ்தவம் ய :
படேத்பக்தியுக்தோ குஹம் ஸம்ப்ரணம்ய ।
ஸபுத்ரான் களத்ரம் தனம் தீர்க்கமாயுர்
லபேத் ஸ்கந்தஸாயுஜ்யமந்தே நரஸ்ஸ :

புஜங்க ப்ரயாதமென்ற விருத்தத்தில் செய்யப்பட்ட இந்த ஸ்தோத்திரத்தை எவன் பக்தியுடன் பாராயணம் செய்கிறானோ அவன் புத்ரர்களையும், பத்னியையும், தனத்தையும், நீண்ட ஆயுளையும் அடைவான். அவன் முடிவில் ஸ்கந்த ஸாயுஜ்யத்தையும் அடைவான்.

(சங்கரபகவத்பாதர், திருச்செந்தூர் சென்று ஆண்டவனை வணங்கும்பொழுது ஆண்டவனுடைய சரணங்களை ஸர்ப்பராஜனான சேஷன் பூஜிப்பதைக் கண்டவுடன், அப்புஜங்கத்தின் விருத்தத்திலேயே தனது தோத்திரத்தையமைத்தார் என்று பெரியவர்கள் கூறுகிறார்கள்)

ஸ்ரீ ரஸ்து

ஸ்ரீகுஹச்சரணம்



# கார்த்திகேயப்பிரபாவம்

(மஹாபாரதம் வனபர்வாவில் 232-வது அத்யாயத்தில் கூறப்பட்டுள்ளது.)

युधिष्ठिर उवाच -யுதிஷ்டிர உவாச

(१) भगवञ्छ्रोतुमिच्छामि नामान्यस्य महात्मनः ।
त्रिषु लोकेषु यान्यस्य विख्यातानि द्विजोत्तम ॥

பகவன் ச்ரோதுமிச்சாமி நாமான் யஸ்ய மஹாமத்ன :
திருஷு லோகேஷு யான்யஸ்ய விக்யாதானி த்விஜோத்தம

वैशम्पायन उवाच வைசம்பாயன உவாச

(२) इत्युक्तः पाण्डवेयेन महात्मा ऋषिसंनिधौ ।
उवाच भगवांस्तत्र मार्कण्डेयो महातपा. ॥

இத்துயுக்த : பாண்டவேயேன மஹாத்மா ரிஷிஸம்நிதெள ।
உவாச பகவாம்ஸ்தத்ர மார்க்கண்டேயோ மஹாதபா : ॥

मार्कण्डेय उवाच மார்க்கண்டேய உவாச

(३) आग्नेयश्चैव स्कन्दश्च दीप्तकीर्तिरनामयः ।
मयूरकेतुर्धर्मात्मा भूतेशो महिषार्दनः ॥

ஆக்னேயச்சைவ ஸ்கந்தச்ச திப்தகீர்த்திரனாமய : ।
மயூரகேதுர் தர்மாத்மா பூதேசோ மஹிஷார்தன : ॥

(४) कामजित् कामदः कान्तः सत्यवाक् भुवनेश्वरः ।
शिशुः शीघ्रः शुचिश्चण्डो दीप्तवर्णः शुभाननः ।

காமஜித் காமத : காந்த ஸத்யவாக்புவனேச்வர :
சிசு சீக்ர : சுசிச்சண்டோ தீப்தவர்ண : சுபானன : ।

(५) अमोघस्त्वनघो रौद्रः प्रियश्चन्द्राननस्तथा ।
दीप्तशक्तिः प्रशान्तात्मा भद्रकृत् कूटमोहनः ॥

அமோகஸ்த்வனகோ ரௌத்ர : ப்ரியச்சந்திரானனஸ்ததா !
திப்தசக்தி : பிரசாந்தாம்பா பத்ரகிருத் கூடமோ ஹன : !!

(६) षष्ठीप्रियश्च धर्मात्मा पवित्रो मातृवत्सलः
कन्याभर्ता विभक्तश्च स्वाहेयो रेवतीसुत ॥

ஷஷ்டீபிரியச்ச தர்மாத்மா பவித்ரோ மாத்ருவத்ஸல : |
கன்யா பர்த்தா விபக்தச்ச ஸ்வாஹேயோ ரேவதிஸுத : ||

(७) प्रभुर्नेता विशाखश्च नैगमेयः सुदुश्चरः ।
सुव्रतो ललितश्चैव बालक्रीडनकप्रियः ॥

ப்ரபுர்நேதா விசாகச்ச நைகமேய ஸுதுச்சர : |
ஸுவ்ரதோ லலிதச்சைவ பாலக்ரீடனகப்பிரிய : ||

(८) खचारी ब्रह्मचारी च शूरः शरवणोद्भवः ।
विश्वामित्रप्रियश्चैव देवसेनाप्रियस्तथा ॥

கசாரீ பிரம்ஹசாரீ ச சூர : சரவணோத்பவ : |
விச்வாமித்ரப்ரியச்சைவ தேவஸேனாப்ரியஸ்ததா ||

(९) वासुदेवप्रियश्चैव प्रियः प्रियकृदेव तु ।
नामान्येतानि दिव्यानि कार्तिकेयस्य यः पठेत् ।
स्वर्गं कीर्तिं धनं चैव स लभेन्नात्र संशयः ॥

வாஸுதேவப்ரியச்சைவ பிரிய : பிரியகிருதேவ து !
நாமான்யேதானி திவ்யானி கார்த்திகேயஸ்ய ய : படேத் |
ஸ்வர்க்கம் கீர்த்திம் தனம் சைவ ஸலபேந்நாத்ர ஸம்சய : ||

(१०) स्तोष्यामि देवैर्ऋषिभिश्च जुष्टं
शक्त्या गुहं नामभिरप्रमेयम् ।

षडाननं शक्तिधरं सुवीरं
निबोध चैतानि कुलप्रवीर ॥

தோக்ஷ்யாமி தேவைர்ரிஷிபிச்ச ஜுஷ்டம்
சக்த்யா குஹம் நாமபிரப்ரமேயம் !
ஷடானனம் சக்திதரம் ஸுவிதம்
நிபோத சைதானி குருப்ரவீர !!

(११) ब्रह्मण्यो वै ब्रह्मजो ब्रह्मविच्च
ब्रह्मेशयो ब्रह्मवतां वरिष्ठः ।
ब्रह्मप्रियो ब्राह्मणसर्व्रती त्वं
ब्रह्मज्ञो वै ब्राह्मणानां च नेता ॥

ப்ரம்மண்யோ வை ப்ரம்மஜோ ப்ரம்மவிச்ச
ப்ரம்மேசயோ பிரம்மவதாம் வரிஷ்ட : !
ப்ரம்மப்ரியோ ப்ராம்மண ஸவ்ரதி த்வம்
பரம்மஜ்ஞோ வை பிராம்மணானாம்ச நேதா !!

(१२) स्वाहा स्वधा त्वं परमं पवित्रं
मन्त्रस्तुतस्त्वं प्रथितः षडर्चिः ।
संवत्सरस्त्वमृतवश्च षड् वै
मासार्धमासावयनं दिशश्च ॥

ஸ்வாஹா ஸ்வதா த்வம் பரமம் பவித்ரம்
மந்த்ரஸ்துதஸ்த்வம் பிரதித : ஷடர்சி : !
ஸம்வத்ஸரஸ்த்வமிருதவச்ச ஷட் வை
மாஸார் தமாஸாவயனம் திசச்ச !!

(१३) त्वं पुष्कराक्षस्त्वरविन्दवक्त्रः
सहस्रवक्त्रोऽसि सहस्रबाहुः ।

त्वं लोकपालः परमं हविश्च
त्वं भावनः सर्वसुरासुराणाम् ॥

த்வம் புஷ்கராக்ஷஸ்த்வரவிந்தவக்த்ர :
ஸஹஸ்ரவக்த்ரோஸி ஸஹஸ்ரபாஹு : !
த்வம் லோகபால : பரமம் ஹவிச்ச
த்வம் பாவன : ஸர்வஸுராஸுராணாம் !!

(१४) त्वमेव सेनाधिपतिः प्रचण्डः
प्रभुर्विभुश्चाप्यथ शत्रुजेता ।
सहस्रभूस्त्वं धरणी त्वमेव
सहस्रतुष्टिश्च सहस्रभुक् च ॥

த்வமேவ ஸேனாதிபதி : ப்ரசண்ட :
ப்ரபுர்விபுச்சாப்யத சத்ருஜேதா !
ஸஹஸ்ரபூஸ்த்வம் தரணீ த்வமேவ
ஸஹஸ்ரதுஷ்டிச்ச ஸஹஸ்ரபுக் ச !!

(१५) सहस्रशीर्षस्त्वमनन्तरूपः
सहस्रपात् त्वं गुह शक्तिधारी ।
गङ्गासुतस्त्वं स्वमतेन देव
स्वाहामहीकृत्तिकानां तथैव ॥

ஸஹஸ்ரசீர்ஷஸ்த்வமனந்தரூப : !
ஸஹஸ்ரபாத் த்வம் குஹ சக்திதாரீ !
கங்காஸுதஸ்த்வம் ஸ்வமதேன தேவ
ஸ்வாஹாமஹீக்ருத்திகானாம் ததைவ !!

(१६) त्वं क्रीडसे षण्मुख कुक्कुटेन
यथेष्टनानाविधकामरूपी ।

दीप्तासि सोमो मरुतः सदैव
धर्मोऽसि वायुरचलेन्द्र इन्द्रः ॥

த்வம் க்ரீடஸே ஷண்முக குக்குடேன
யதேஷ்ட நானாவித காமரூபீ ।
தீக்ஷாஸி ஸோமோ மருத : ஸதைவ
தர்மோஸி வாயுரசலேந்த்ர இந்த்ர : ॥

(१७) सनातनानामपि शाश्वतस्त्वं
प्रभुः प्रभूणामपि चोग्रधन्वा
ऋतस्य कर्ता दितिजान्तकस्त्वं
जेता रिपूणां प्रवरः सुराणाम् ॥

ஸனாதனானாமபி சாச்வதஸ்த்வம்
ப்ரபு : ப்ரபூணாமபி சோக்ரதன்வா ।
ருதஸ்ய கர்த்தா திதிஜாந்தகஸ்த்வம்
ஜேதா ரிபூணாம் ப்ரவர : ஸுராணாம் ॥

(१८) सूक्ष्मं तपस्तत् परमं त्वमेव
परावरज्ञोऽसि परावरस्त्वम् ।
धर्मस्य कामस्य परस्य चैव
त्वत्तेजसा कृत्स्नमिदं महात्मन् ॥

ஸூக்ஷ்மம் தபஸ்தத் பரமம் த்வமேவ
பராவரஜ்ஞோஸி பராவரஸ்த்வம் ।
தர்மஸ்ய காமஸ்ய பரஸ்ய சைவ
த்வத்தேஜஸா க்ருத்ஸ்னமிதம் மஹாத்மன் ॥

(१९) व्याप्तं जगत् सर्वशूरप्रवीर
शक्त्या मया संस्तुत लोकनाथ ।

नमोस्तु ते द्वादशनेत्रबाहो
अतः परं वेद्मि गतिं न तेऽहम् ॥

வ்யாப்தம் ஜகத் ஸர்வஸுரபிரவீர
சக்த்யா மயா ஸம்ஸ்துத லோகநாத !
நமோஸ்து தே த்வாதச நேத்ரபாஹோ
அத : பரம் வேத்மி கதிம் ந தேஹம் !!

(२०) स्कन्दस्य य इदं विप्रः पठेज्जन्म समाहितः ।
श्रावयेद् ब्राह्मणेभ्यो यः शृणुयाद् वा द्विजेरितम् ॥

ஸ்கந்தஸ்ய ய இதம் விப்ர : படே. ஜ்ஜன்ம ஸமாஹித :
ச்ராவயேத் பிராம்மணேப்யோ ய : ச்ருணுயாத் வாத்விஜேரிதம் !!

(२१) धनमायुर्यशो दीप्तं पुत्राञ्छत्रुजयं तथा ।
स पुष्टितुष्टी सम्प्राप्य स्कन्दसालोक्यमाप्नुयात् ॥

தனமாயுர்யசோ தீப்தம் புத்ராஞ்சத்ருஜயம் ததா !
ஸபுஷ்டிதுஷ்டீ ஸம்ப்ராப்ய ஸ்கந்தஸாலோக்யமாப்னுயாத் !!

(மஹாபாரதம் வனபர்வம் 232 - வது அத்யாயம் கார்த்திகேய ப்ரபாவம் - மொழிபெயர்ப்பு)

தர்மபுத்திரர் - (மார்க்கண்டேயரைப் பார்த்து) கேட்கின்றார் - " பூஜிக்கத் தகுந்த மஹார்ஷே ! சிறந்த அந்தணரே மூன்று உலகங்களிலும் மிக்க ப்ரஸித்தி பெற்றவைகளான மஹாத்மாவான குஹப்பெருமானின் திருநாமங்களைக் கேட்க விரும்புகிறேன், கூறவேண்டும்" இங்ஙனம் வினவப்பட்டவரும் பூஜ்யரும் மஹா தபஸ்வியுமான மார்க்கண்டேய முனிவர் கூறுகிறார்.

" (1) ஆக்நேய : (2) ஸ்கந்த : (3) தீப்தகீர்த்தி : (4) அனாமய : (5) மயூரகேது : (6) தர்மாத்மா (7) பூதேச : (8) மஹிஷார்தன : (9) காமஜித் (10) காமத : (11) காந்த : (12) ஸத்யவாக் (13) புவனேச்வர : (14) சிசு : (15) சீக்ர : (16) சசி : (17) சண்ட : (18) தீப்தவர்ண : (19) சுபானன : (20) அமோக : (21) அனக : (22) ரௌத்ர : (23) ப்ரிய : (24) சந்த்ரானன :(25) தீப்தசக்தி :(26) ப்ரசாந்தாத்மா (27) பத்ரகிருத் (28) கூடமோஹன : (29) ஷஷ்டீபிரிய : (30) தர்மாத்மா (31) பவித்ர : (32) மாத்ருவத்ஸல : (33) கன்யாபர்ததா (34) விபக்த : (35) ஸ்வாஹேய : (36) ரேவதீஸுத : (37) பிரபு : (38) நேதா (39) விசாக : (40) நைகமேய : (41) ஸுதுச்சர : (42) ஸுவ்ரத : (43) லலித : (44) பாலக்ரீடனகப்ரிய : (45) கசாரீ (46) பிரஹ்மசாரீ : (47) சூர : (48) சரவணோதப்வ : (49) விச்வாமித்ரபிரிய : (50) தேவஸேனாப்ரிய : (51) வாஸுதேவப்ரிய : (52) ப்ரிய : (53) ப்ரியகிருத் (54) கார்த்திக்கேயன்-" என்று ஐம்பத்திநான்குதிருநாமங்களிருககின்றன. இங்ஙனம் 54 திவ்ய நாமங்களை யெவனொருவன் ஆதரவுடன் படிக்கின்றானோ? அவன் புகழ், செல்வம், ஸ்வர்கமிவைகளையடைகின்றான். இவ்விஷயத்தில் ஸம்சயமே இல்லை.

(இங்ஙனம் குஹக்கடவுளின் திருநாமங்களை, மார்க்கண்டேய முனிவர் தர்மபுத்திரனுக்கு உபதேசித்து அப்பெருமாளை ஸ்தோஸ்த்ரம் செய்ய ஆரம்பித்தவுடன் குஹன் முனிவருக்கு திவ்ய தரிசனம் தந்து அவ்வுருவத்தை ஸ்தோத்ரம் செய்யத் தூண்டினாரென்று அறியப்படுகின்றது.)

மார்க்கண்டேயர் கூறுகிறார் - "அரசே ! இவ்வாறு திவ்யநாமங்களால் அளவிடமுடியாத மஹிமை வாய்ந்தவனும், ஞானசக்தியுடன் கூடினவரும், தேவர்களாலும் முனிவர்ளாலும் எப்பொழுதும் ஸேவிக்கப்படுகின்றவனும், வேலைத் தாங்கியவனும் மஹாவீரனுமான ஆறுமுகத்தவனை ஸ்தோத்திரம் செய்யப்போகிறேன். அப்பெருமாளின் திவ்ய மஹிமைகளை ஒன்றுபட்ட மனதுடன் கேட்பீராக.

(மார்க்கண்டேயர் முருகனைத் தான் நேரில் கண்டவாறு துதிக்கின்றார்.)

முருகா ! நீ அந்தணர்களுக்கு நன்மையைச் செய்கின்றவன், பரம்பொருளிலிருந்து தோன்றியவன் பரம்பொருளை யுணர்ந்தவன், பரம்பொருளிலேயே நிலைபெற்றிருப்பவன். பரம்பொருளையுணர்நதவர்களுள் சிறந்தவன். வேதத்தினிடத்தில் அன்பு கொண்டவன் அந்தணருக்கொப்பான விரதங்களையனுஷ்டிப்பவன், வேதமுணர்ந்தவன், அந்தணர்களை நல்வழிக்கு நடத்துபவன்.

முருகா ! நீயே ஸ்வாஹா (தேவர்க்குரிய அன்னமாகிறாய்) ஸ்வதா (பித்ருக்களுக்குரிய அன்னமாகின்றாய்) பரிசுத்தமான வஸ்த்துக்களுள் மிக்க பரிசுத்தமான பொருளாகிறாய், மந்திரங்களால் போற்றப்படும் புகழ்பெற்ற அக்னிதேவனும் நீயே! (பிரபவ முதலிய) ஆண்டுகளும் (வஸந்தம் முதலிய) ஆறு ருதுக்களும் (சித்திரை முதலிய) மாதங்களும் (சுக்லகிருஷ்ண) பக்ஷங்களும், உத்தாரயணம் தக்ஷியாணனம் என்ற அயனங்களும் (கிழக்கு முதலிய) திசைகளும் நீயே !

முருகா ! நீ தாமரையிதழ் போன்ற விழிகளுடையவன், தாமரைமலர் போன்ற முகத்தையுடைவன், ஆயிரம் முகங்கள் கொண்டவன், ஆயிரம் கரங்கள் கொண்டவன். ( தீக்ஷிதர்களால் யாகங்களில் தேவர்களுக்கென்று கொடுக்கப்படும்) உயர்ந்த ஹவிஸ்ஸூம் நீயே ! அஸுரர்களையும் தேவர்களையும் காப்பாற்றுபவனும் நீயே.

முருகா ! நீயே நிலையான படைத்தலைவன் பிறரால் அணுகமுடியாத பராக்ரமம் வாய்ந்தவன். (அகத்திலும், புறத்திலும் யாவர்க்கும் எப்பொழுதும்) தலைவனாக விருப்பவன் நீயே. பகைவர்களை வெல்பவன் நீயே.

குஹப்பெருமாளே ! நீ ஆயிரக்கணக்கான இருப்பிடங்களையடைந்தவன், உலகத்தைத் தரிக்கும் பூமியும் நீய்ே ! ஆயிரக்கணக்கான வஸ்துக்களையனுபவிப்பவன் ஆயிரக்கணக்கான வஸ்துக்களால் ஸந்தோஷிப்பவனும் நீயே !

ஆயிரக்கணக்கான தலைகளைப் பெற்றவன், கணக்கிலடங்காத வடிவங்கள் பெற்றவன். ஆயிரக்கணக்கான கால்களைப் பெற்றவன்

(சிவபெருமான் தந்த) பெரிய வேல் தாங்கியவனும் நீயே.

ஏ கந்தபெருமானே ! நீர் உமது விருப்பப்படி, கங்கைக்கும், ஸ்வாஹைக்கும் அக்னியின் மனைவிக்கும், பூதேவிக்கும் கிருத்திகை நக்ஷத்திரங்களுக்கும் புதல்வனாகத் தோன்றினீர். ஏ ஆறுமுகா ! நீர் உம் இஷ்டம்போல் பல ரூபங்களைத் தாங்கி சேவலுடன் விளையாடுகின்றீர்.

ஏ ஷண்முகா ! நீயே தீக்ஷையாகிறாய் (யாகம் செய்யும் தீக்ஷிதர்கள் கையாளும் நியமங்களாக விருக்கிறீர்) சந்திரன், வாயு, ஏழுகூட்டங்களாக விருக்கும் 49 மருந்துக்களும், தர்ம தேவதையும், இந்திரனும் சிறந்த மலையும் மேருவும்) நீயே?

ஏ முருகா ! நீ நிலையாயுள்ள வஸ்த்துக்களுக்குள் நிலையாய் நிற்பவன், தலைவர்களுக்கெல்லாம் தலைவனாக இருப்பவன், மிக்க பயங்கரமான வில்லையுடையவன், ஸத்யத்தைக் காப்பாற்றுபவன், அஸுரர்களை நாசம் செய்பவனும் பகைவர்களை வெல்பவனும் தேவர்களுள் சிறந்தவனும் நீயே.

ஏ ஸுப்பிரம்ஹண்யா ! உலகமனைத்திற்கும் ஏகநாதனே ! தேவர்களையனைவர்க்கும் மேலான மஹா வீரனே ! பன்னிரு கண்களோடும் கரங்களோடும் கூடியவனே ! உன்னால் கொடுக்கப்பட்ட சக்தியால் என்னால் ஸ்தோத்ரம் செய்யப்படுகின்ற தேவனே ! ஒப்பயர்வற்ற சிறந்த தவமென்ற ஸாதனமும் நீயே ! உயர்ந்தவைகளையும் தாழ்ந்தவைகளையுமொருங்கேயுணர்ந்தவன். சிறியதும் பெரிதுமான எல்லா பொருள்களிலும் ஊடுறுவியிரப்பவனும் நீயே. மேலான அறமின்பமாகிய புருஷார்த்தங்களுக்கு இருப்பிடமாயிருப்பனும் நீயே ஹே, மஹாத்மாவே ! உம்முடைய திவ்ய தேஜஸ்ஸால் உலகம் முழுவதுமே வியாபிக்கப்பட்டிருக்கிறது. கந்தபெருமானே ! நமஸ்கரிக்கின்றேன். உம்மையே உண்மைப்பொருளாக உணர்கின்றேன். உம்மைத் தவிர்த்து வேறொரு புகலிடத்தையுமறியேன்.

இவ்வாறு கந்தப்பெருமானின் அவதாரத்தை யெவனொருவன் அமைதியுடன் படிக்கின்றானோ - அந்தணர்களைக் கேட்கும்படி

செய்கிறானோ ஆதரவுடன் சிரவணம் செய்கின்றானோ அவன் இவ்வுலகில், சிறந்த செல்வத்தையும், நீண்ட வாழ்வையும், அழியாப்புகழையும், நல்ல மக்களையும், பகைவர்களிடமிருந்து வெற்றியையும், உடல் வனப்பையும், உள்ளப்பூரிப்பையும் பெற்று முடிவில் கந்தபெருமானின் உலகிற்குச் செல்கிறான்.

(கார்த்திகேயப் பிரபாவத்தில் கந்தபெருமான் தனது விருப்பத்தாலேயே மட்டும் (தான் முன்ஜன்மத்தில் செய்த தர்மாதர்ம வினைகளால் இழுக்கப்படாதவராய்) கங்கைக்கும், பூமிக்கும் ஸ்வாஹைக்கும், கிருத்திகை நக்ஷத்திரங்களுக்கும் புதல்வனாகத் தோன்றினான் என்று 15 வது ச்லோகத்தில் குறிப்பிட்டுள்ளது மிகவும் கவனிக்கத் தகுந்தது. கடவுளும், மனிதனும் இவ்வுலகில் உடலுடன் காணப்பட்டாலும், பிறப்பதிலும், பிறப்பதற்குரிய காரணத்திலும் பிறப்பதனால் ஏற்படும் பிரயோஜனத்திலும் பெரிய வேற்றுமையிருக்கிறது கடவுள் அவயங்களின் வளர்ச்சி, தளர்ச்சி இல்லாமல், உடலுக்கு அடிமையாயில்லாமல், உலகத்தாலும் உடலாலும் தடைபடாத நிர்மலமான அறிவுள்ளவனாக மாயையால் தோன்றுகிறான். மனிதன் வளர்ச்சி, தளர்ச்சியுடன் கூடியவனாய், உடலுக்கு அடிமையாய், உலகத்தாலும் உடலாலும் தடைபட்ட அறிவுடையவனாய்த் தோன்றுகிறான். உலகிலுள்ள நல்லோர்களுடைய நற்செய்கைகள் குன்றி கெட்டவர்களின் தீய செய்கைகள் ஓங்கும்பொழுதும் கடவுள் மாயையால் உடலைத் தோற்றிவைக்கிறார். மனிதன் முன்ஜன்மம் முடியும்பொழுது தான் முன் செய்த வினைகளின் பயனை அனுபவிக்க வேண்டிய காலத்தில் அவைகளாலேயே உடலைப் பெறுகிறான். கடவுள் தான் தோற்றி வைத்த உடலால், நல்லோர்களைக் காப்பாற்றி தீயவர்களை வேருடன் அகற்றி, அதர்மத்தை அகற்றி, தர்மத்தை செழிக்கும்படி செய்கிறார். இதுவே கடவுளின் தோற்றத்திற்கு பிரயோஜனம். மனிதன் தவிர்க்க முடியாத தன் வினைப்பயனை (இன்பதுன்பங்களை) தான் அனுபவிக்கிறான். இதுவே தான் உடலெடுத்ததின் பிரயோஜனம். இங்ஙனமுள்ள வேற்றுமை காரணத்தாலேயே மனிதன் கடவுளை வழிபடக் கடமைப்பட்டிருக்கிறான்.



பிரும்ம-ஸ்ரீ-வரகூர் சங்கர வைத்யநாத குருஸ்வாமி சாஸ்திரிகள்

**12-12-1911 - 09-12-1990**

ஆத்ம வித்யா பூஷணம், ஸாஹித்ய விசாரத.
ஸாஹித்ய/வேதாந்த, சிரோமணி, வேதாந்த துரீண.
ப்ரஸ்தானத்ரய வித்வான் :
திருவனந்தபுரம் அரசு சமஸ்கிருத
கல்லூரியில் வேதாந்த பேராசிரியர்
சமஸ்கிருத மொழி
புலமையையும், சாஸ்திர நிஷ்டையையும்
பாராட்டி ராஷ்ட்ரபதி விருது பெற்ற
ஆன்மிகச் செல்வர்.




**GURU PUBLICATIONS**
New No : 25, Thiruvenkatam Street,
West Mambalam.Chennai-33.

குரு பப்ளிகேஷன்ஸ்
புதிய எண் 25, திருவேங்கடம் தெரு,
மேற்கு மாம்பலம், சென்னை-33.